திருப்பதிக்கு.... வருகை புரியுங்கள்!



திருப்பதி

ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமியின்

# தெப்போற்சவம்

**18-2-78 முதல் 22-2-78 வரை**



என்றனுள்ளங் கடலினைப் போலே
எந்த நேரமு நின்னடிக் கீழே
நின்று தன்னகத் தொவ்வொ ரணுவும்
நின்றன் ஜோதி நிறைந்தது வாகி
நன்று வாழ்ந்திடச் செய்குவை யையா,
ஞாயிற்றின்க ணொளி தருந் தேவா!
மன்று வானிடைக் கொண்டுல கெல்லாம்
வாழ நோக்கிடும் வள்ளிய தேவா!

— கவிஞர் பாரதியார்.








# ஸப்தகிரி

மலர்: 8 ஜனவரி 1978 இதழ் 8

தனிப்பிரதி 50 காசு.
வருடச் சந்தா ரூ. 6

சிறப்பாசிரியர்:
திரு. பி. எஸ். ராஜகோபாலராஜு,
ஐ. ஏ. எஸ்.,
செயலாட்சித்தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம் ஏ.
தி. தி. தேவஸ்தானம்.
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு,
Marketing Officer.
Publication Section,
T. T. D. Press Compound.
TIRUPATI-517501.

## உள்ளுறை



ஸப்தகிரி வாசகர்களுக்கும், விற்பனைப் பிரதிநிதிகளுக்கும், கட்டுரைகள் மற்றும் புகைப்படங்கள் அனுப்புவோர்க்கும் எங்கள் உளங்கனிந்த புத்தாண்டு நல் வாழ்த்துக்கள்!

— திருமலை திருப்பதி தேவஸ்தானம்.

# ஆசிரியர் உரை

இறைவனின் அரவணைப்பில் இனிய சுகத்தை அனுபவித்திருப்போம். ஆனால் அவ்வியற்கையின் சீற்றத்தால் விளையும் பயங்கர விளைவுகளைக் கண்டிருப்போமா? அவர்களை இத்தகைய முறையில் காணச் செய்த இயற்கை அவ்வாறிருந்து போதும். ஆம். போன வருடம் நவம்பர் மாதத்திலே தமிழக, ஆந்திர மாநிலங்களின் கரையோரப் பகுதிகளை நிலை குலையச் செய்து, அப்பிரதேசத்தில் நாட்டிற்கே பேரிடர் ஒன்றினை விளைவித்துச் சென்றன, அண்மையில் உருவெடுத்த புயலும், கடும் மழையும் வெள்ளமும். புயலுக்குப்பின் அமைதி. ஆனால் அவ்வமைதிக்குப்பின் இயற்கை விட்டுச் சென்ற கண்ணீர்க் கறைகளும், அழிவுச் சின்னங்களும் பயங்கரமானவை. நாடிழந்தவன் நாளை நாடலாம். பொருள் இழந்தவன் மீண்டும் அதனை ஈட்டலாம். ஆனால் தன் கண் முன்னாலேயே புயற்காற்றாலும், வெள்ளத்தாலும் அடித்துச் செல்லப்பட்ட தன்னைப் பெற்றவரையும், தான் பெற்றவரையும், தன்னை நாடி வந்தவளையும், மற்றும் உற்றார் உறவினரையும் மறுபடியும் அவனால் காண முடியுமா? இவ் அவல நிலையை இயற்கையைத் தவிர வேறு யார் அவனுக்கு வழங்குவர்.

மும்முறை எழுமபிக் கட்டிடங்களைத் தரைமட்டமாக்கிய கடலலையின் அபாயத்தையும், வீடுக் கூரைகளைக் காகித மெனப் பறக்கவிடுத்த புயற்காற்றின் வேகத்தையும் சாதாரண மனித சக்தியால் தடுக்க முடியாதுதான். ஆனால் இவ் அவல நாடகத்தை அரங்கேற்றிய இயற்கையின் நோக்கமென்ன? அதாவது இறைவனின் நினைப்பென்ன? சற்றே சிந்திப்போம்.

அழகான கல் ஒன்றைச் சிற்பி செதுக்குவதைக்காணும் அறியாச் சிறுவன் ''இந்த ஆள் ஏன் இப்படி உடைக்கிறான்'' என்று நினைப்பான். களி மண்ணில் நின்று கொண்டு ''ததைய தக்கா'' என்று கால்களால் மிதிக்கும் குயவனைப் பார்த்து அச்சிறுவன் 'என்ன குழந்தையைப் போல் குதித்து விளையாடுகின்றானே'' என்று நினைக்கக்கூடும். இப்படித்தான் கடவுளுடைய செயல்களுக்கு முன்னால் நாம் அறியாச் சிறுவர்களாக விளங்கி சிற்சில போது வியந்து மகிழ்கின்றோம்; சிற்சில சமயம் அழுது புலம்புகின்றோம். நம்முடைய அகராதியில் பரிசளிக்க வேண்டியவர்கள், தண்டனைக்குரியவர்கள் என்று பகுத்து வகுத்து, தொகுத்து வைத்திருக்கிறோம். ஆனால் எல்லா உயிர்களுக்கும் தந்தையாகிய அப்பரம்பொருள், ஆக்குவதும் அழிப்பதும் அவன் உடைமையே ஆனமையின், இந்த இரு வேறு நிலைகளில் நின்று நம்மைப் பார்ப்பதில்லை. எனவே இந்த விபத்துக்களுக்கெல்லாம் இறைவனைப் பழித்தோ, குறைத்தோ பேசுவது நினைப்பது அறியாமையாகும்.

ஆனால் இவற்றால் உணரத்தக்கதுதான் என்ன? பொதுவாக மனிதனிடத்தே தன்னலம் மிகுந்துவிட்டது. உடைமைப்பற்று அவன் உடம்பில் ஊறிவிட்டது. உலகம் அனைவருக்கும் சொந்தம், மனிதன் அன்பு செய்யவே பிறந்தவன் என்ற உண்மையை உணர்த்துவதற்காகத்தான் அவ்வப்போது இது போன்று தண்டிக்கின்றான் என்னவோ? அன்பின் சக்தியை அவன் உணர அவனுக்கு உணர்த்தப்படும் காட்சி பயங்கரமாக இருத்தல் வேண்டும் போலும். இல்லாவிட்டால், தன்னைச் சுற்றிலும் பலர் பட்டினியால் வாடுவதைக் காணினும், சாலை விபத்துக்கள் போன்ற பல விபத்துக்களின்மூலம் அவ்வப்போது பலர் தம் முன்னாலேயே இறப்பதைக் கண்டும், அவர்களுக்காக அவன் சிறிதும் நெஞ்சங் கசிந்து உதவி செய்தானில்லை. அதுபோது, அன்பின் அவசியத்தைவிட, தன்னுடைய அன்றாடப் பிரச்சனைகளே அவசரமாகத் தெரிந்தன. ஆனால் இது போன்ற பெரிய உயிரிழப்பு, பொருளிழப்பு, நிலமிழப்பு ஆகியவற்றைக் கண்டபோதுதான், ஏன் அதைப்பற்றிக் கேட்டாலும்கூட, அவனையும் அறியாமல் மொழி மறந்து, நிலம் கடந்து, நாடு மறந்து அவன் உள்ளம் இப்போது உதவ முன் வருகின்றது. வேள்வித் தீயில் உருகுகின்ற வெண்ணெயைப் போன்று, இரக்க உணர்வில் தன்னலம் கரைகின்றது. அன்பின் சக்தியால் இயற்கையின் விபரீத விளைவுகளையும் தாக்குப்பிடிக்க முடியும் என்பதை இன்று நாம் கண் கூடாகக் காண்கின்றோம். எனவே, அவனிடம் குடிகொண்டுள்ள அன்பு, இரக்கம் போன்ற தெய்வ உணர்வுகளைத் தூண்டுவதற்காகத்தான் இப்படியெல்லாம் நிகழ்கின்றன என்று கருத வேண்டி உள்ளது.

எனினும், நம்மை நாமே எவ்வளவுதான் தத்துவ ரீதியாக, ஆன்மீக உணர்வுடன் சமாதானம் செய்துகொண்டாலும், பாதிக்கப்பட்ட மக்களின் கண்ணீரை மானசீகமாக துடைத்தாலும், கால வேகத்தால்தான் அக்கண்ணீர் வெள்ளம் தணியும். இயற்கையின் கோபத்திற்கு இலக்காகி உற்றார் உறவினரை இழந்து, உடைமையிழந்து பாதிக்கப்பட்ட தமிழக ஆந்திர மக்களுக்கு லைட்தகிரி தன் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கின்றது. இயற்கை அளித்துச் சென்ற அழிவுகளை ஒரு தண்டனையாக ஏற்றுக்கொள்ளாமல், ஒரு பாடமாக மனதில் மனிதன் பதிய வைத்துக் கொள்ள வேண்டும். மனித உயிரை, அவர்கள் உடைமையை இயற்கை பறித்துக் கொள்ளலாம். ஆனால் அவர்கள் உள்ளத்தில் பீறிடும் அன்பின் சக்தியை அதனால் அழித்துவிட முடியாது என்பது உறுதி.

கடந்த சென்ற ஆண்டின் அவலமிக்க இறுதி நிகழ்ச்சிகளை மறக்கும் வண்ணம், மலர்ந்துள்ள இப்புத்தாண்டில் நலம் பல சிறக்கவும், மனிதனிடம் உறைந்துள்ள தெய்வ உணர்வுகள் மேம்பட்டு விளங்கவும் அம்மாமாயன் துணை புரிவானாக!

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

16-11-77 அன்று திருமலையில்கூடிய குழு கூட்டத்தின்போது தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின்வருமாறு:

அண்மையில் நடைபெற்ற நேர்முகத் தேர்வில் வெற்றி பெற்ற திரு. டி. பசுபதி அவர்களை திருப்பதி ஸ்ரீ வேங்கடேஸ்வர இசை நாட்டியக் கல்லூரியின் முதல்வராக நியமிப்பதென்று குழு தீர்மானித்துள்ளது.

திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி கோயிலின் துணைக்கோயிலான ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயிலுக்கு மாதம் ரூ. 250/- என்ற ஊதிய விகிதத்தில், இரு அர்ச்சகர்களை நியமிப்பதென்று குழு தீர்மானித்துள்ளது. இதற்குமுன்பு எடுக்கப்பட்ட குழு முடிவில், அக்கோயிலுக்கான ஹாரத்தி, அர்ச்சனை டிக்கெட்டுகளின் மூலம் வசூலிக்கப்படும் தொகையில் பாதியை அக்கோயில் அர்ச்சகமிராஸிதார்க்கு வழங்குவதாக இருந்தது.

தேவஸ்தானத்தின் பொறுப்பிலுள்ள மற்றைய கோயில்களின் துணைக் கோயில்களில் இருப்பது போன்றே, திருப்பதி ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயிலின் துணைக் கோயிலான ஸ்ரீ லக்ஷ்மிநாராயண சுவாமி கோயிலுக்கும் அர்ச்சனை (0-75) ஹாரத்தி (0-25) களுக்கான டிக்கெட் முறையினை செயல்படுத்துவதென்று குழு முடிவு செய்துள்ளது.

திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரசுவாமி கோயிலில் வெள்ளிக்கிழமை தோறும் நடைபெறும் ஆர்ஜித சேவையான அபிஷேகத்தின்போது அபிஷேக கிண்ணங்களை கொண்டுவரும் நபர்களை உட்பட இருவரை மட்டுமே கோயிலுக்குள் அனுப்புவதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திர மாநிலத்தில் ராஜமண்டரியில் இலவசமாக மனை ஒன்று கிடைக்குமாயின் தேவஸ்தான திருமண மண்டபம் ஒன்றினைக் கட்டுவதென்று குழு தீர்மானித்துள்ளது.

அனந்தபூரில் திருமண மண்டபம் ஒன்றுகட்ட குழு முடிவெடுத்துள்ளது.

தி. தி தேவஸ்தானத்தின் முழுச் செலவில் ஒட்டு மொத்தமான இலவச சமூக திருமணங்களை நடத்துவதென்று குழு தீர்மானித்துள்ளது. இத்திருமண வசதிகள் இந்துக்களுக்கு மட்டுமேயாகும். மேலும் நடைபெறும், திருமணங்கள் பதிவு செய்யப்பட்டு, அதற்கான சான்றிதழ்களும் மணமக்களுக்கு வழங்கப்படும்.

உள்ளூர் மக்கள் கேட்டுக் கொண்டதன் பேரில், அவர்களுடைய சொந்தச் செலவில் அமெரிக்காவில் மிஸிஸிபியில் தேவஸ்தான தகவலறிவிப்பு நிலையம் ஒன்றினைச் செயற்படுத்த குழு அனுமதியளித்துள்ளது. மேலும் அவர்கள் அவ்வூரில் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் ஒன்றினைக் கட்டுவதாக இருந்தால், அக்கோயிலுக்காக இறைவனின் திருவிக்ரகங்கள் இலவசமாக தேவஸ்தானம் வழங்கும்.

ஆந்திரமாநில கிழக்குக் கோதாவரி மாவட்டத்தில் கண்ட்டி கிராமத்திலுள்ள ஸ்ரீ ராமலிங்க சுவாமி மற்றும் ஸ்ரீ கேசவ சுவாமி கோயில்களையும், அதே மாவட்டத்தைச் சார்ந்த காரகதூரு கிராமத்திலுள்ள ஸ்ரீ பட்டாபிராமசுவாமி கோயிலையும் புதுப்பிக்கும் பணிகளுக்காக ஒவ்வொரு கோயிலுக்கும் தலா ரூ. 15,000 - வழங்குவதென்றும், மெதக் மாவட்டம் பொந்த பல்லி கிராமத்திலுள்ள ஸ்ரீ வீரபத்ர சுவாமி கோயிலையும், ஹைதராபாத் நகரிலுள்ள ராமமந்திரம் ஒன்றினையும் புதுப்பிப்பதற்காக தலா ரூ. 15,000 - வழங்கவும் குழு தீர்மானித்துள்ளது.

ஹைதராபாத் – சென்னை விமானத்தில் திருப்பதிக்காக 48 இடங்கள் ஒதுக்கப்பட்டும், தற்போது 18 இடங்களே ஒதுக்கப்படுவதால், இவ்வெண்ணிக்கையை 30 ஆக உயர்த்த வேண்டுமென்றும், திருப்பதிக்கு வரும் எல்லா இரயில்களிலும் தி. தி. தேவஸ்தானத்திற்கென சில இடங்களுக்கான தனி ஒதுக்கீடு வசதியினையும் இரயில்வே இலாகாவினர் அளிக்க வேண்டும் என்றும் குழு தீர்மானித்துள்ளது.

ஆந்திராவில் நந்தியாலாவில் இரண்டு ஏக்கருக்கும் குறையாமல் இலவசமாக மனை ஒன்று கிடைக்குமாயின் அங்கு ரூ. 7 இலட்சத்திற்கு மிகாமல் திருமணமண்டபம் ஒன்றினைக் கட்ட குழு தீர்மானித்துள்ளது.

திருப்பதியில் 15-12-77 முதல் 18-12-77 வரை நடைபெற்ற தி. தி. தேவஸ்தானத்தின் இரண்டாவது திறந்தவெளி கூடைப் பந்தாட்டப் போட்டிக்கென குழு ரூ. 13,500 ஒதுக்கியுள்ளது.

பிரகாசம் மாவட்டம் கித்தலூரில் ஸ்ரீ பாதாள நாகேஸ்வர சுவாமி கோயிலின் பழமையை நினைவிற் கொண்டு, அக்கோயிலுக்கான ராஜ கோபுரம் மற்றும் அவ்வூரில் தேவஸ்தான திருமண மண்டபம் ஆகியவற்றைக் கட்டுதற்குத் தேவஸ்தானத்தின் பங்காக ரூ. 3 இலட்சம் வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது. ★

# மகா சங்கராந்தி

"இந்துக்களின் பஞ்சாங்கத்தில் பண்டிகையில்லாத மாதங்கள் தான் உண்டா; ஆனால் அவற்றில் பண்டிகைகளும் விழாக்கள் காணப்படுகின்றன" என்பது பழமொழி. இந்த மொழியைப் படித்தப்படி பழமொழியல்ல; ஆண்டுதோறும் பல விழாக்கள் கொண்டாடப்படுகின்றன என்பதே அதன் கருத்து.

இங்ஙனம் சிறப் பெருமையாகவும் சீரும் சிறப்பாகவும் கொண்டாடப் படும் திருவிழாக்களில் ஒன்று மகர சங்கராந்தி-பொங்கல் பண்டிகையும் ஆகும். தீபாவளிப் பண்டிகையைப் போல் இதுவும் தேசிய விழாக்களில் ஒன்றாகும். வானத்தில் நடுநாயகமாக விளங்கும் சூரியன் மகர ரேகையை அடைவதை நாம் உத்தராயணம் என்று அழைக்கிறோம். இந்த உத்தராயண புண்ணிய காலத்தையே மகர சங்கராந்தி — பொங்கல் பண்டிகை என்று அழைக்கிறோம்

மகா பாரதத்திலும், பிரயாகை மகாத்மியத்திலும் உத்தராயண புண்ணிய காலம் வெகு எடுப்பாகக் கூறப் படுகிறது. எடுத்துக் காட்டாக, பீஷ்மர் உத்தராயணம் வரும் வரையில் தன் உயிரை வைத்துக் கொண்டு மகர சங்கராந்தி நாளன்று தேகத்தியாகம் செய்தார் என்பதைக் கூறலாம்.

சூரியனுக்கு நாம் நன்றி செலுத்தும் முறையில் கொண்டாடப்படுவதே மகர சங்கராந்தி—பொங்கற் பண்டிகை.

உணவுக்கும், உடைக்கும், பெருந் தொழில் வளத்திற்கும் உதவும் பயிர்த் தொழிலுக்கும் சூரியன் இன்றியமையாத சக்தி. சூரியன்தான் நீர்வளம், நிலவளம், பயிர்வளம், ஆரோக்கிய வளம் முதலியவற்றை வாரி வாரி வழங்கி மக்களை வாழ்விப்பவன். எனவே தங்கள் தொழிலுக்கும் வளமான வாழ்விற்கும் உதவும் கடவுளுடைய நன்கொடையான சூரிய பகவானை வழிபாட்டின் முக்கியமாகவும், தங்கள் வாழ்வுக்கு உதவுவது பற்றி மற்றவர்களும் மகர சங்கராந்திப் பண்டிகையைக் கொண்டாடுவதன் மூலம் சூரியனை வணங்குகிறார்கள். இந்த பிங்கள ஆண்டு தைமாதம் 14-ஆம் நாள் (14-1-78) மகர சங்கராந்திப் பண்டிகை கொண்டாடப்படும்.

தைமாதம் முதல்நாள் கொண்டாடப்படுகிறதல்லவா? 'ஆடிப்பட்டம் தேடி விதை' என்ற பழமொழிப்படி பயிர் செய்தவர் அப்பொழுதுதான் அறுவடை முழுக்க முழுக்க செய்து உழைப்பின் பயனைப் பெறுவர். புது நெல்லையும், மஞ்சள், கரும்பு, ஆகியவற்றையும் தங்கள் தங்கள் வீடுகளில் மூட்டை மூட்டையாகக் கொண்டு போய்ச் சேர்க்கிறார்கள். எனவே தான் தை பிறந்ததும் பொங்கல் - சங்கராந்திப் பண்டிகை நாடெங்கும் கொண்டாடப்படுகிறது.

சங்கராந்தி வடநாட்டில், குறிப்பாக, பிரயாகையில் பழங்காலந் தொட்டு நீராடும் பெரு விழாவாகும். "கிரகணத்தின் போது காசியிலும், மகர சங்கராந்தியின் போது பிரயாகையிலும் இந்துக்கள் நீராட வேண்டும்" என்பது பழமொழி. இதிலிருந்து சங்கராந்தியின் போது நீராடல் எவ்வளவு முக்கியம் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கும்.

## விழா முறை :

புதிதாக அறுவடை செய்தபொருள்களை புதுப்பானையில் பொங்கலாகச் செய்து, சூரியபகவானுக்குப் படைத்து வழிபடுகின்றனர். வடநாட்டார் இதை 'கிச்சடிஉணவு' என்று கூறுவர்.

சங்கராந்தி தினத்தன்று உறவினரும், நண்பர்களும் புடைசூழ, 'பால் பொங்கிற்று!' என்று ஒருவரையொருவர் கேட்டுக்கொண்டு, வாழ்த்துக்களைத் தெரிவித்தும் மகிழ்கின்றனர்.

## தமிழ்நாட்டுப் பொங்கல் பண்டிகை!

இரண்டாம் நாளன்று தங்கள் தொழிலுக்கும் வாழ்விற்கும் உயிர் நாடியாக உறுதுணையாக விளங்கி, உதவிய கன்று, காளைகளுக்குத் தங்களை நன்றியைச் செலுத்தும் முறையில் அவற்றைக் கழுவி, அலங்காரஞ் செய்து பொங்கலிடுவார்கள் விவசாயி பெருமக்கள். இப்பண்டிகையின் பொருட்டு வீடுகளுக்கெல்லாம் செம்மண் பூசி, சுண்ணாம்படித்துத் துப்புரவாகச் செய்வதைக் கண்டு களிக்கலாம். எனவே வீட்டில் பழைய அசுத்தங்கள் நீங்கி நல்ல தேகாரோக்கிய இடங்களாக அமைகின்றன.

மூன்றாம் நாள் காணும் பொங்கல். சிறுவர்களும், மற்றவர்களும் பெரியோர்களைக் கண்டு புத்தாடையும், அன்பளிப்பும் பெறும் நாள். அன்று எல்லோருக்கும் விருந்து வைக்கப்படுவது வழக்கம். மனிதர்களுக்கும் மாடுகளுக்கும் நலம் ஏற்படுவதால் சங்கராந்தி-பொங்கல் பண்டிகையை "மகராஜன் பண்டிகை நாள்!" என்று அழைக்கப்படுகிறது.

## முடிவுரை :

இம்மாதிரிப் பண்டிகைகளைக் கொண்டாடுவதால் உடலும், உள்ளமும்பரிசுத்தமடைகின்றன. மக்களிடையே ஒற்றுமை உணர்ச்சியும், மட்டற்ற மகிழ்ச்சியும் ஒருங்கே ஓங்கி நிற்கின்றன. பரந்த மனப்பான்மையும், நன்றியறியும் குணமும் வளர்கின்றன. அகத்தின் அழகு முகத்தில் தெரியுமன்றோ!



திரு. R. பத்மநாபன், B.A., B.T.,
வேலூர்-12.

# திருமலையிலும் திருப்பதியிலும் உணவு வசதிகள்

நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து யாத்திரை மேற்கொள்ளும் யாத்திரிகர்களின் அடிப்படை பிரச்னைகள், அவர்கள் போகும் இடங்களில் அமையும் தங்குவதற்கான இருப்பிடமும், உண்ணும் உணவும்தான். இதை மனதிற்கொண்டுதான் தி. தி. தேவஸ்தானம் திருமலையிலும் திருப்பதியிலும் யாத்திரிகர்கள் தங்குவதற்காக இலவச சத்திரங்கள் பலவற்றையும், வசதியான காட்டேஜுகள் பலவற்றையும் கட்டியுள்ளது. இவை எவ்வகையில் உதவியாக அமைந்துள்ளன என்பது திருமலைக்கு வருகை புரியும் ஒவ்வொரு யாத்திரிகருக்கும் நன்கு தெரியும். அடுத்து எழுவது உணவுப் பிரச்னை. திருமலையில் தனியார் உணவு விடுதிகள் பல இருந்தாலும், சுகாதாரமான முறையில் செய்யப்பட்டு, நியாயமான விலையில் வழங்கப்படும் உணவு வகைகள் தேவஸ்தானத்தாரின் உணவு விடுதிகளிலும், மற்றும் தேவஸ்தானத்தாரால் குத்தகைக்கு விடப்பட்டுள்ள தனியார் நடத்தும் சில சிறந்த உணவு விடுதிகளிலும் மட்டுமே கிடைக்கும். இவற்றைப் பற்றிய சில அடிப்படை விவரங்கள், யாத்திரிகர்களின் நன்மையின் பொருட்டு கீழே வழங்கப்பட்டுள்ளன.

## அன்னபூர்ணா ஹோட்டல்

*(சங்கு மிட்டா காட்டேஜ் அருகில்)*

சிற்றுண்டி நேரம்: 5 A.M. to 10 P.M.
சாப்பாடு நேரம் : 9 A.M. to 3 P.M.
6 P.M. to 10 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-75
முழுசாப்பாடு ரூ. 3-00

(சனிக்கிழமைகளில் பாயசம் வழங்கப்படும்)

இவற்றைத்தவிர கார வகைகளும், குளிர்பானங்களும், சூடான பானங்களும் இங்குக் கிடைக்கப் பெறலாம்.

## உட்லேண்ட்ஸ் ஹோட்டல்

*(தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதிக்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 10-00 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2-30 P.M.
6 P.M. to 10-00 P.M.

தமிழ்நாடு சாப்பாடு ரூ. 4-00
வடஇந்தியச் சாப்பாடு ரூ. 6-00
அளவு சாப்பாடு ரூ. 1-75

இவற்றைத் தவிர இனிப்பு வகைகளும், குளிர் பானங்களும் நியாயமான விலையில் இங்குக் கிடைக்கும்.

## காஃபி போர்டு

*(கல்யாண கட்டாவிற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 10 P.M.
மினி காஃபி (4 அவுன்ஸ்) 40 காசு
ஒரு கோப்பை காஃபி (6 அவுன்ஸ்) 60 காசு

இவற்றைத் தவிர சிற்றுண்டி மற்றும் குளிர் பானங்கள் போன்ற வசதிகளும் உள்ளன.

இந்நிறுவனத்தாரின் மற்றொரு கிளை பி. பி. ஷெட்டிற்கு (க்யூ ஷெட்டிற்கு) அருகில் உள்ளது.

வேலை நேரம் : 5 A.M. to 10 P.M.
தயிர்சாதம் (ஒரு பாக்கெட்) ரூ. 0-60
எலுமிச்சை சாதம் ,, ரூ. 0-60

குளிர்பானங்களும் கிடைக்கும்.

## டீ போர்டு

*(ஆழ்வார் ஏரிக்கு அருகில்)*

வேலை நேரம் : 6 A.M. to 11 A.M.
2 P.M. to 6 P.M.

டீ 25 காசு.
ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள்
(ஒரு பாக்கெட்) 75 காசு.

## தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதி

சிற்றுண்டி நேரம் : 6 A.M. to 9 A.M.
3 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 11 A.M. to 2 P.M.
7 P.M. to 9 P.M.

முழு சாப்பாடு ரூ. 3-00

இவைத்தவிர கார வகைகளும், இனிப்பு வகைகளும் குறைந்த விலையில் கிடைக்கும்.

(சாப்பாட்டுக்கும், சிற்றுண்டிக்கும் 3 மணி நேரத்திற்கு முன்பாகவே தங்கள் தேவைக்கு தகவல் தருதல் அவசியம்)

## திருப்பதியில் தி. தி. தேவஸ்தான உணவு விடுதி

*(இரண்டாவது புதிய சத்திரத்திற்கு அருகில்)*

சிற்றுண்டி நேரம் : 5 A.M. to 9-30 A.M.
2-30 P.M. to 6 P.M.
சாப்பாடு நேரம் : 10-30 A.M. to 2 P.M.
6-30 P.M. to 9 P.M.

அளவு சாப்பாடு ரூ. 1-50
தயிர் (ஒரு கப்) ரூ. 0-40

இதைத் தவிர சிற்றுண்டி வகைகள், ஆம்ப்ரோ க்ளுகோ பிஸ்கட்டுகள், குளிர்பானங்கள் முதலிய உணவு வசதிகளும் உண்டு.

தி. தி. தேவஸ்தானத்தின் முதல் சத்திரத்தில் உள்ள மற்றொரு தேவஸ்தான உணவு விடுதியிலும் சாப்பாட்டைத் தவிர மற்றைய சிற்றுண்டி வகைகள் குளிர் பானங்கள் போன்ற வசதிகள் காலை 5 மணி முதல் இரவு 9 மணி வரை யாத்திரிகர்களுக்குக் கிடைக்கும்.

பகவானிடம் ஆழ்ந்த பக்தி பூண்ட பக்தர்களின் நிலையை கீதாசாரியன்,

மச்சித்தா மத்கத ப்ராணா போதயந்த: பரஸ்பரம்
கதயந்தஸ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச

என்று பகர்ந்தார். பக்தர்கள் என்னிடம் நிலையான மனத்தை உடையவர்களாய், என்னிடம் தங்கள் உயிரை வைத்தவர்களாய் என்னுடைய குணங்களை ஒருவர்க்கொருவர் அறிவிப்பவர்களாய், என்னை எப்பொழுதும் சொல்லிக் கொண்டிருப்பவர்களாய் (சந்தநம்) சந்தோஷமடைகின்றனர், ஆனந்தானுபவம் கொள்கின்றனர் என்பது மேற்கூறிய சுலோகத்தின் கருத்தாகும். பகவத் பக்தியில் ஆழ்ந்தவர்களாய் மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார்களும் தங்கள் அருளிச் செயல்கள் வாயிலாக பகவானின் திருக்கல்யாண குணங்களை நெஞ்சார நினைத்

இவ்வாறு பரதன் நிலை இருந்ததென்றால் 'இளையாழ்வார்' என்று கொண்டாடப் பெறும்லக்ஷ்மணனோ 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்கிற கணக்கிலே ராமபிரானுக்கு கைங்கர்யம் செய்தலையே பெரும்பேருகக் கொள்ளும் இயல்பினனுகக் காட்சியளிக்கிறுன். சான்ருக ஒரு நிகழ்ச்சியை மட்டும் குறிப்பிடலாம்-வனவாச காலத்தில் லக்ஷ்மணன் கூறுவான்-'இராமா' காட்டில்நீர் மைதிலியோடு சந்தோஷத்துடன் இருப்பீராக. அடியேன் தாங்கள் விழித்துக் கொண்டிருக்கும்போதும், தூங்கும் போதும் எல்லா குற்றேவல்களையும் செய்வேன்' என்று. தங்கள் இனிய சகோதரனிடம் இரு சகோதரர்களுக்கு உள்ள பாச உணர்வை மட்டும் நாம் இங்கு நோக்கலாகாது. கண் கடலிலும் வைகுந்த வானாட்டிலும் எழுந்தருளியுள்ள ஸ்ரீமந் நாராயணனன்றே இராமபிரான். ஆகவே அப்படிப்பட்ட பகவானிடம்

# பகவத் விஷயம்

துருகி வாழ்த்தி வழிபட்டு ஏத்தி நின்றுர்கள். 'உன்னை விடத்துணியார் மெய்தெளிந்தார் தாம்' என்கிற கணக்கிலே அவர் தம் உள்ளப்பாங்கு விரிந்திருந்தது. பக்தர்கள் செய்யும் ஒவ்வொரு செயலும் பகவானுக்கு அர்ப்பணம் செய்வதாகவே அமையும். பக்தர்களின் அணியில் முதலாமவனுக கொண்டாடப்படும் பரதாழ்வானும் கானகம் ஏகிய அண்ணல் ராமனை மீண்டும் தலைநகர் எழுந்தருளுமாறு ப்ரார்த்திக்கப்போனவன் தமையனுர் திரும்ப எழுந்தருளாமல் இருக்கச் செய்தேயும் தமையனிடமிருந்த பாச உணர்வால் உந்தப்பட்டவனுய் ராமபிரான் மறுபடியும் கூப்பிடுவாரோ என்னும் ஆசையால் குஹனுடன் அங்கேயே தங்கியிருந்ததாகக் கூறுகிறுர்:-

குஹேன ஸார்த்தம் தத்ரைவ
ஸ்திதோஸ்மி திவஸான் பஹுந்|
ஆஸயா யதி வா ராம: புந
ஸப்தாபயேதிதி||

பக்தர்களுக்குண்டாகும் எண்ண எழுச்சியே இவை என்றுகொள்ளவேண்டும். ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களுள் ஒருவரான வேதாந்த தேசிகனும் தனது பாதுகாஸஹஸ்ரத்தில் - 'பரதாய பரம் நமோஸ்து தஸ்மை ப்ரதமோதாஹரணுய பக்தி பாஜாம்' என்று அருளிச் செய்து, பக்தர்களின் அணியிலன்றே முதலாமவனுக பரதாழ்வானை குறிப்பிடுகிறுர். இதுபோன்று வால்மீகியும் ''லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:'' என்று லக்ஷ்மணனை கைங்கர்ய லக்ஷ்மியோடு கூடியவன் என்றல்லவா அறிமுகப்படுத்துகிறுர்- அத்தகைய மஹிமை பொருந்திய பகவான் அந்தர்யாமியாய்எல்லார் மனத்தேயும்நித்யவாஸம் செய்கிறுன். இதையே ஆழ்வாரும் 'மனத்துள்ளாய் மாகடல் நீருள்ளாய்' என்கிறுர். 'பெரிய விசாலமான பாற்கடலில் உள்ளவனுகிய பகவானே! நீ அடியேன் 'சிறிய' மனத்திலும் குடிகொண்டுள்ளாய்' என்று கூறுகிறுர்

போதும். 'பனிக்கடலில் பள்ளி கோளைப் பழகவிட்டு ஓடி வந்தென் மனக்கடலில் வாழ வல்ல மாய மணாள நம்பி' என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தி இங்கு நினைத்தற்குரியது.

பகவானிடம் தனக்குள்ள பக்தி முதிர்ச்சியால் பெரியாழ்வார் தனது திருமொழியில் இவ்வாறு கூறுவார்:- 'கிருஷ்ணா! இந்த ஆய்ப்பாடியில் தீச்செயல் புரியும் பிள்ளைகள் பலர் உளர். ஆயினும் ஊரிலுள்ளோர் உன் பேரில் தான் குற்றம் சுமத்த கண்ணுயிருப்பார்கள். ஆகவே நீ இங்கேவா!' என்றும், ஆநிரை மேய்க்க கண்ணனை அனுப்பிய போது—'கண்ணு! குடையும், செருப்பும் கொடாதே உன்னை அனுப்பினேனே! சூரியவெப்பத்தால் உடைந்து கிடக்கிறகூர்மையானகற்கள் நிறைந்த கானகத்துக்குஉன்னை அனுப்பினேனே' என்றும், கண்ணுக்கு இனியானை என்னைற்கரியானை நினைத்து நினைத்து கஷ்டப்படுவதாக 'யசோதா நிலையில்' இருந்து விஷ்ணுசித்தர் வேதனைப் படுகிறுர். விஷ்ணு மூர்த்தியை தனது சித்தத்தில் இருத்தியவரன்றே பெரியாழ்வார்!

திரு. P. R. ரங்கராஜன், திருப்பதி.

தன்னையும் சீதையையும் விட்டு விட்டு இராமபிரான் வனம் ஏக நேரிட்டால் அத்துயரை தங்களால் தாங்க இயலாது என்பதை அறிந்த இளைய பெருமாளும்,

நச ஸீதா த்வயா ஹீநா நசாஹ மபி ராகவ
முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலான் மத்ஸ்யாவிவோத்ருதௌ||

என்றல்லவா கூறுகிறுர். 'ராகவா! தண்ணீரிலிருந்து கரையில் போடப்பட்ட மீன்களைப் போல் நாங்கள் வாழ்ச்சியுறுமல் இறந்து போவோம்' என்று லக்ஷ்மணன் கூறுகிறுர். ஆச்ரிதர்கள் மட்டும் அபிமானிக்கக் கூடியவனுக இராமன் இருக்கவில்லை. வைய வந்தவாயாலும் வாழ்த்தி வழிபடத் தகுந்தவனன்றே அவன். 'ராம: கமல

பத்ராக்ஷ:' என்று சூர்ப்பணகை புகழ்கிருள் இராமனை. ஒரு சிறந்த மலை தாதுக்களுக்கெல்லாம் இருப்பிடமாக உள்ளதுபோல் இராமபிரானும் குணங்களுக்கு இருப்பிடமாக விளங்குவதாக 'தாரை' கூறுகிருள். இப்படியாக பர-வியூஹ-விபவ - அந்தர்யாமி - அர்ச்சை என்கிற ஐந்துவகை நிலையில் இருந்து ரக்ஷிக்கும் பகவானை மனத்தில் நிறுத்துதலைத்தான், 'மச்சித்தா: என்கிற கீதாவாக்யம் நமக்கு புகட்டுகிறது. இராமனுகவும், கிருஷ்ணனுகவும் அவதரித்த பகவானுடைய திவ்ய கல்யாண குணங்களையும், அவனுடைய திவ்விய சேஷ்டிதங்களையும் 'ஸந்தோஷார்த்தம் விம்ருசதி மூஹு:' என்றவாறு ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்வது பெரியோர் மரபு. என்னே! ஆச்சரியம்! பகவான் கிருஷ்ணனே தனது திவ்ய சேஷ்டிதத்தை, தானே கூறிக்கொள்கிருன் — குசேலோபாக்யானத்தில் குசேலர் தனது பால்ய நண்பன் கிருஷ்ணனை சந்தித்தபோது அவர்கள் பாலப்பிராயத்தே சாந்தீபினி முனிவரிடம் குருகுலவாசம் செய்தபோது நடந்தநிகழ்ச்சிதனை ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்வது இங்கு கவனிக்கத் தகுந்தது.

பக்தர்களும் நாமமாயிரம் ஏத்த நின்ற நாராயணனை பலவாறு போற்றிப் புகழ்வர். பகவானுடைய ஆயிரம் நாமங்களில் ஏதாகிலும் ஒன்றை அநுஸந்தித்து உய்வதற்கு உபாயம் தேடுவர். தமக்கு பிறக்கும் புத்திரர்க்கு 'கோவிந்தன்' முதலான பெயரிட்டழைத்தால் தம்மன்னை நாரணன் நரகம்புகாள் என்கிற திடமான நம்பிக்கை அவர்களுக்கு இருந்தது.

கோவிந்த நாமத்தில் இருக்கும் சக்திதான் என்னே! ஆண்டாள் கூறுவாள்:-

'கூட்டிலிருந்து கிளியெப்போதும் கோவிந்தா கோவிந்தா என்றழைக்கும்' என்று. தன் வீட்டிலிருக்கும் கிளியே கோவிந்தநாம ஸங்கீர்த்தனம் செய்வதாகக் கூறி பெருமைப்படுகிருள் பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை.

க்ஷத்ரபந்து என்ற ஒரு கொடியவன் இருந்தான். தன் தாய் தந்தையரையும் ஹிம்சித்து கானகத்தில் வசித்து வரலானுன். அங்கேயும் ஜீவஹிம்சை தொடர்ந்தது. ஒருநாள் கண் தெரியாத ஒரு பெரியவர் தட்டுத் தடுமாறி க்ஷத்ரபந்து இருக்கும் பக்கம் வந்தார். வந்தவர் ஒரு பள்ளத்தில் விழுந்து விட்டார். கடினமான பாறையிலும் நீர் கசியுமாபோலே கொடிய இவன் உள்ளத்தேயும் ஈரம் கசிந்தது. உடனே க்ஷத்ரபந்துவும் அவரை பள்ளத்திலிருந்து தூக்கிவிட்டு அவரை இளைப்பாறச் செய்தான். உடனே அந்தப் பெரியவர் களைப்பு நீங்கியவராய் இவனைப் பார்த்து-நீ யார்? உன் பெயரென்ன? உன் தொழிலென்ன? என்றெல்லாம் வினவினுர். உடனே க்ஷத்ரபந்துவும் தன் பெயரையும் தான் செய்யும் கொடிய காரியங்

34-ம் பக்கம் பார்க்க

# நுண்ணிய கருமமும் நிகழ்ந்திடுமோ நின்னருளின்றி?

திரு. எஸ். சங்கர நாராயணன், கல்பாக்கம்.

உன்னுல் முடியாதது தான் என்ன தானே?
என்னுல் தாங்க முடியவில்லை துன்பம் தானே!
மன்னு! ஏன் இந்த மௌனம் தானே?
சொன்னுல் புரியாதா உனக்குத் தானே?

கண்ணு! மனம் கனியாதா உனக்குத்தானே?
வண்ணு! ஏனிந்த நிலை எனக்குத்தானே?
அண்ணு! உனது மனம் தான் கல்லா என்னே?
மண்ணு? பெண்ணு? பொன்னு? வேண்டிலேன் நானே?

தருமத்தைத் தரணியில் நிறுவியவன் நீயே யன்ருே!
தருமனுக்குத் தருமம் நீயேயன்று சொன்னுய் அன்ருே!
தருமனைக் காத்தாய் பாரதப் போரில் அன்று!
தருமனுய் வாழ்ந்திட அருள் செய்வாய் இன்று!

பண்ணிய பாவம் தான் எத்துணையோ நானறியேன்!
புண்ணியம் செய்தறியேன் இப்புவியிலும் நானே!
எண்ணிய எண்ணமெல்லாம் உன் எண்ணம் தானே!
நுண்ணிய கருமமும் நிகழ்ந்திடுமோ நின்னருளின்றி!

ஆடிய ஆட்டமெல்லாம் ஓய்ந்தபின் தேடினேன் உன்னையே!
தேடிய செல்வமெல்லாம் தொலைந்தபின் நினைத்தேன்உன்னையே
வாடிய பயிருக்கு மழைபோல் எனக்கு நீயேயன்ருே!
பாடிய பாட்டின் தலைவனே! நின் தாள்போற்றி!



# பொங்கலோ பொங்கல்!

வித்வான் டி. கே. கோவிந்தன்,

திருவிடைமருதூர்.

"புனத்திணைக் கிள்ளி புது அவி காட்டி, உன் பொன்னடி வாழ்க! வாழ்க!!" என்று செங்கதிர்த் தேவனைப் போற்றி மிக்க உற்சாகத்துடன் கொண்டாடும் மங்கலத் திருநாள் பொங்கல் புதுநாள்! வீடும், வாயிலும், நாடும், நகரமும், வயலும், காடும், புதுச் சோபையுடன், கதிரவன் அளித்த செழுமையாற் சிறந்து, மகிழ்ச்சி மயமாகக் காட்சியளிக்கும் இனிய நாள் பொங்கல் நாள்! உழவர் உழைப்பின் பெருமையை உலகுக்கு உணர்த்தும் ஓர் உயரிய நன்னாள்! நாடு மகிழும் நன்னாள்!

பொங்கலுக்குச் சிறந்த பொருள் இரண்டேதான்! அவை நெல்லும், கரும்பும்! மக்கள் தாம் பெற்ற நெல்லும், கரும்பும் தமக்கு வேண்டிய வளம்தர உதவிய நிலத்திற்கும், சூரியனுக்கும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டவர். நன்றிக் கடனை தைப் பொங்கலாகக் கொண்டாடினர். மார்கழித் திங்கள் முழுதும் நீராடி, இறைவனை வேண்டிய கன்னிப் பெண்கள், தைத்திங்கள் பிறந்த முதல் நாள், தம் வேண்டுகோள் நிறைவேற, அரிசி, பருப்பு, வெல்லம், நெய், கலந்து பொங்கல் வைத்து, சூரிய பகவானுக்கு நிவேதித்து, தம் நல நினைப்பு நிறைவேறும் என்ற நம்பிக்கையோடு நோன்பை முடிக்கிறார்கள்.

## போகிப் பண்டிகை!

அன்றைய (சிலப்பதிகாரத்திலே) இந்திர விழாதான் இன்று போகிப் பண்டிகையாக வழங்கப்பட்டுக் கொண்டாடப்படுகிறது. பொங்கலுக்கு முன்னாலே போகியைக் கொண்டாடுகிறோம். 'போகி' என்பவன் இந்திரன். மேகங்களை இயக்கும் மேலோன். மழை பொழியச் செய்யும் மன்னன். மழையின்றி மாநிலத்திலே பயிர் செழிக்காது. பயிரில்லையேல் உயிரில்லை! "விசும்பில் துளி விழின் அல்லால் மற்றாங்கே பசும்புல் தலை காண்ப தரிது" என்றார் திருவள்ளுவர். இதனால் மழையின்றி மாநிலத்தார்க்கு ஒன்றுமில்லை என்பது நன்றாக விளங்கும்! எனவே இந்திரனை வழிபட்டு வளம்பெற போகிப் பண்டிகையை கொண்டாடுகிறோம்!

## பொங்கல் பண்டிகை!

இந்திரனுக்காக போகிப் பண்டிகை! சூரியனுக்காகப் பொங்கல் பண்டிகை! புதுப்பானையிலே, மஞ்சளும், இஞ்சியும் சுற்றி மங்கலமோடு அடுப்பிலேற்றுவர். தீட்டிய வெள்ளரிசியும், காராவின் தீம்பாலும், இனிப்பும் சேர்த்துப் பொங்கல் செய்வர். எங்கும் மங்களம் தங்கும் இந்நாள் சூரியபகவானுக்கு உரித்தாகும். சூரிய ஒளி இன்றேல் உலகத்திலே வாழ முடியாது. ஒவ்வொரு பொருளுக்கும், சூரிய வெளிச்சம் வேண்டியதே. சூரியன் தேர்மேலேறி போவதுபோல கோலமிட்டு நிறம் தீட்டுவர், கொலுமண்டபம் அமைப்பர். சூரிய வடிவம் அழகுற அமைப்பர். இருபுறமும் வாழை, தெங்குகளின் குலைகள் தொங்கும். பாலும், பழமும், பொங்கலும், கரும்பும் படைப்பர். தீப ஆராதனைகள் அமர்க்களப்படும்.

"பாலுப் பானை பொங்கவேணும்-நம்
தாலிக் கயிறு தொங்க வேணும்"

என்று பெண்கள் பொலிவுடன் விளக்கேற்றி வணங்குவர். சிறுவர், சிறுமியர் கூத்தாடுவர். பெற்றோரையும், உற்றோரையும் வணங்குவர். பொங்கலோ பொங்கல் களிப்பை விவரிக்கவே இயலாது!

## மாட்டுப் பொங்கல்!

மூன்றாவது நாள் மாட்டுப் பொங்கல்! ஆவினத்தின் ஒத்துழைப் பாலும், ஆதவனின் ஆதரவாலும்

# பெரிய நம்பி பணித்த வார்த்தை

திரு. இராம. பொன்னப்பன், M.A.

மதுரை – 11.

திருமால் அடியரைத் தீண்டா தவரெனத்
தாழ மதியார் சால்புடைப் பெரியோர்
தாழ்குலத் துதித்த சான்றோ ராகிய
மாறநேர் நம்பி வைகுந் தம்புக
அந்தணர் திலகன் பெரிய நம்பி
அந்திமக் கிரிசைகள் அன்பொடு முடிப்ப
பெரிய நம்பிதன் பெருமைசேர் சீடர்
இராமா நுசர்தாம் "இவ்வகை நமக்குத்
தகுமோ வென்று சாற்றிய தோடு
வேலியைத் தகர்த்து விட்டனர் என்று
தேவரீர் செயல் குறித்து அரங்கத் துறைசிலர்
இயம்பினர்" என்ன "இராமா நுசரே !
கற்புடைச் சனகியைக் கவர்ந்து சென்ற
பொல்லா வரக்க னெடுபுரி போரிடைத்
தன்னுயிர் நீத்த சடாயு தன்னை
பெரிய தந்தை யாமெனப் பேணி
அந்திமக் கிரியைகள் தாமே யாற்றிய
காகுத்தன் தன்னைக் காட்டிலும் அடியேன்
உயர்ந்தவன் ஆவனோ ஒப்பில் சடாயு
தன்னிலும் மாறநேர் நம்பி தாழ்ந் தவரோ ?
அடிமை பெற்ற ஆன்றோர் திலகன்
விதுரன் விண்புக வேந்தன் தருமன்
முன்கடன் முடித்திட முனைந்துதன் கரத்தால்
எள்ளும் நீரும் இறைத்திட வில்லையோ ?
குலத்தால் வருமோ பெருமையும் சிறுமையும் ?
அடியரைச் சாதிகொண்டு ஆய்வது உண்டோ ?
திருமகிழ்த் தேசிகன் திருவுளம் இதனினும்
வேறோ ?" என்று விளம்பிடப் பெரிய
நம்பிதன் சேவடி நாண்மலர் சூடி
மெய்ம்மலி உவகை மேவினர்
நம் இராமா நுசராம் நலந்திகழ் குருவே

தான் உழவன் பெருமையடைகிறான் ! மாட்டுச் செல்வமே நாட்டுச் செல்வம் ! குங்குமத்தால், பசுவின் முகத்தை அலங்காரம் செய்து, அதன் கழுத்தில், நெட்டி, முதலியவற்றால் பல வர்ணங்களில் மாலை சாத்தி மகிழ்கிறான். கொம்புகளுக்கு நிறம் பூசுகிறான். சுத்தம் செய்த கொட்டிலில், அதை பூஜை செய்து, பொங்கலும், வெல்லமும், இளந் தேங்காயும் அதற்குக் கொடுத்து வணங்குகிறான்.

## கன்னிப் பொங்கல்!

அடுத்து "கன்னிப் பொங்கல்" கொண்டாடப்பெறும். அதை 'கனுப் பொங்கல்' என்றும் கூறுவார்கள். கன்னிப் பெண்கள் பலவகை சித்ரான்னங்களைத் தயாரிப்பர். ஆற்றிலோ குளத்திலோ சென்று படைப்பர். மணல் மேடைகளிலே காகம் குருவிகளுக்கு உணவிடுவர். "சோலைப் பசுங்கிளியே சோறுண்ண வா" என்று அழைப்பர். படைத்த பலவகை உண்டிகளை உற்றாருக்கும், மற்றோருக்கும் கொடுத்து வணங்கி மகிழ்வர்.

## பிரார்த்தனை!

எந்த வகையில் பார்க்கினும், இவ் விழாக்கள் நன்றி செலுத்தும் விழாக்களாகவே திகழ்கின்றன. எனவேதான் பொங்கல் திருநாள், தம் தலையாய திருநாளாக, விளங்குகின்றது. இத் திருநாளில் இறைவனது சக்தியை நன்றியறிவுடன் நினைத்து நினைத்துப் பூரித்துப் பாலைப்போல தூய மனம் பொங்கிப் பொங்கியே, மங்களப் பொருட்களை எல்லாம் அவருக்கு நிவேதித்து, அடுத்த சங்கராந்தி வரை, இங்குப் பொங்கிய இத்தூய்மையின் சீர்குன்றாது நம்மை ரக்ஷிக்குமாறு இறைவனை பிரார்த்திப்போமாக !



# திருவாய்மொழியில் இராமாவதாரம்

கண்ணன்பால் கொண்ட காதலின் மெய்யுரு வானவர் நம்மாழ்வார். அவர் திருமாலின் அவதாரம் என்றும், அருள் பெற்றவர் என்றும் பாராட்டப் பெறுபவர். அவர்தம் திருவாய்மொழி பத்துப் பத்தாக அமைந்திருப்பது திருமால் எடுத்த பத்தவதாரம் ஒப்பது என்பர் அறிஞர். அந்நூலில் இராமாவதாரம் பற்றி நம்மாழ்வார் என்ன சொல்லுகின்றார் என்று அறிந்து கொள்வது மகிழ்ச்சியளிக்கும். அது குறித்து ஆழ்வார் வழிநின்று இன்று சிந்திப்போம்.



இராமபிரானின் அவதாரம் கண்ணபிரான் தோற்றத்திற்குக் காலத்தால் முந்தியது. எனினும் தமிழ்நாட்டில் அவ்வவதாரம் பற்றிய செய்திகள் பரவியது பின்னர்தான் என்பர் ஆய்வாளர். சங்கநூல்களின் பகுதியான பரிபாடலில் மாயோனை - கண்ணனைப் பற்றிய பல செய்திகள் உள்ளன. இராமாவதாரம் பற்றிய குறிப்பு இல்லை. பிற சங்கப் பாடல்களில் இராமனைப்பற்றிய குறிப்புக்கள் உள. இடைக்காலத்துப் பக்தி வெள்ளம் பரவத் தொடங்கிய நிலையில் எழுந்த திருவாய்மொழியில் முப்பத்து ஒன்பது இடங்களில் இராம சரிதம் பற்றிய குறிப்புக்கள் வருகின்றன. பலகாலும் திரும்பத் திரும்ப வரும் செய்திகளைத் தொகுத்தோமாயின் காணப்பெறும் நிகழ்ச்சிகள் ஒன்பதாகின்றன.

> ''கற்பார் இராமபிரானை யன்றி
>
> மற்றுங் கற்பரோ''
>
> (திருவா. 7-5-1)

என்ற வரியில் ஆழ்வார் இராமபிரானுக்கு முதலிடம் தந்து பேசுவது தெளிவு. இராமபிரான் செயலே-வாழ்வே-கற்றற் குரியது-கடைப்பிடித் தற்குரியது என்று ஆணித்தரமாக வெளியிடுகின்றார். ஆயினும் அப்பதிகத்தின் கண்ணும் ஆழ்வார் வேறு அவதாரங்களைப்பற்றிச் சொல்லாமலில்லை. ஏன் பேசுகின்றார் என்ற ஐய வினாவிற்கு ஒரு விடைதான் கூற முடியும். மானிடமாகவந்த அவதாரம் மூன்றில் இராமாவதாரம் முழுத்தன்மை யுடையது. அதனால் மற்றவற்றைப்பற்றிக் கூறுவதும் அதனுள் அடக்கம் என்ற கருத்தில் அதனைக் கோடல் வேண்டும் போலும்.

டாக்டர். கு. தாமோதரன்,

திருப்பதி.

தசரத இராமனுடைய வீரமும் ஆண்மைச் செயலும் இங்குப் பரக்கப் போற்றப் பெறுகின்றன. இலங்கை எரியூட்டியது, அதன் தலைவனையும் அரக்கர் குலத்தையும் நீறாகுமாறு அம்பு தொட்டது, மராமரம் ஏழும் உருவ ஒரு வாளி கோத்தது, அரக்கியை மூக்கு ஈர்ந்தது, மாசின மாலி மாலிமான் என்றவர்படக் கனன்றது-இவை முதன்மை பெறுகின்றன. இவற்றைத் தவிரத் தம்பிக்கு இலங்கை அருளியதும் (திருவா. 7-6-9) தயரதற்கு மகனாயதும், (திருவா, 10-1-8) அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்கதிக்கு உய்த்ததும், (திருவா. 7–5-1) கூனே சிதைய உண்டைவில் நிறத்தில் தெறித்ததும் (திருவா. 1-5-5) ஆகியனவும் குறிக்கப் பெற்றுள்ளன.

'கூனே சிதைய உண்டைவில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா' என்பது ஒரு அரிய கருத்து. இது இராமன் சிறுவயதில் விளையாட்டாக மந்தரை என்ற கூனியின் மீது மண் உருண்டைகளை வில்லால் எய்ததைக் குறிப்பதாகும், ஏனெனில் 'வில்' இராமனுக்கே உண்டு. கோவிந்தா எனவரும் பெயரைக் கொண்டு இது சாந்து நல்கியவளின் கூனினைக் கண்ணன் போக்கியதைக் குறிப்பதாகக் கொள்வாரும் உண்டு. இக்கருத்தினும் முதலிற் சொல்லியதே பொருத்த முடையதாகும். வில் குறிக்கப் பெறுவதால் இராமன் அம்பு எய்ததுவும் கூன் சிதைவதற்காக என்று காரணம் காட்டி அச் செயல் இராமனுக்கு ஏற்ற மளிப்பதாகவே கொள்ளலாம். இராமன் நாட்டில் பரவியுள்ள புல் முதலிய யாவும் ஒரு காரணமும் இல்லாமல் அவன் அருளால்-தொடர்பால் நன்மையடைந்தன என்று பின்னால் கூறப்

பெறும் கருத்தொடு இக்கருத்து பொருத்தமானதாக அமைகின்றது. தயரதற்கு மகன், நாட்டில் தம்பிக்கு அரசளித்த கதை நாடறியும். காட்டிற்குச் சென்றும் இராமன் தம்பிக்கே அரசளித்தான் என்ற நயமும் 'தம்பிக்கு விரிநீர் இலங்கை அருளி', (திருவா. 7-6-9) என்ற தொடரால் போதரும். குலசேகர ஆழ்வாரும் தம் திருமொழியில் 'இளையவர்கட்கு அருளுடையாய் இராகவனே' (பெருமாள் திருமொழி-8-9) என்று பாடுவர். மாவியையும் மாவி மானையும் அழித்த செயல் இரு இடங்களிலும், அரக்கியை மூக்கு ஈர்ந்த செயல் (திருவா. 2-3-6) ஒரு பாடலிலும் இடம்பெறுகின்றன.

'மாறில்போரரக்கன் மதிள்நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகன்' (திருவா. 6-1-10) இது தலைவன் பிரிவால் துன்புற்றுத் தூது அனுப்பும் ஒரு தலைவியின் பேச்சாக வருகின்றது. ஒப்பற்ற போர் அரக்கன் இராவணனது மதிலைச் சாம்பலாக்கி மகிழ்ந்த, என்றும் உயரும் வீரமுடையவன் என்பது இதன்பொருள். இராமன் இலங்கையை அழித்ததுவும் இராவணனைக் கொன்றதுவும் 'கொம்புபோல் சீதை பொருட்டு' (திருவா. 4-2-8) என்று பாடுகின்றார் ஆழ்வார். அதனை மனத்திற் கொண்டு இவ்வரியை நோக்கினால் இதன் நயம் புலப்படும். முன் ஒரு பெண்ணின் பொருட்டு அத்தகைய பெரு முயற்சியைச் செய்த பெருவீரன் என் பொருட்டு ஏன் அருள் காட்டக் கூடாது? என்பதே அவள் உள்ளக் கிடக்கை. அவன் பிரிவால் துன்புறுகின்றாள் ஆயினும், அவன் தன்பால் வரவில்லை என்று குறை காண்கின்றாள் ஆயினும் அந்நிலைமையிலும் அவனது வீரத்தை இவளால் மறக்க முடியவில்லை. அத்தகைய நாளும் உயரும் வீரம் இராமபிரானது வீரம். அதுவே ஏறு சேவகம் எனப் பெறுகின்றது. இராமனது ஆற்றற் சிறப்பு அவனது வில்லாற்றலை எடுத்து விளக்குவதால் அறிவிக்கப் பெறுகின்றது. 'தென்னிலங்கை எரியெழச் செற்ற வில்லி' (திருவா. 3-6-2) என்றும், 'மராமரம் பைந்தாள் ஏழுருவ ஒருவாளி கோத்த வில்லா' (திருவா. 2-6-9) என்றும் வருவது காணலாம். 'சுக்ரீவன் உன் ஆற்றலில் ஐயம் கொண்டான்; அதனைப் போக்க நீ ஓர் அம்பு எய்து ஏழு மாமரங்களையும் ஒரு சேரத் துளைத்தாய். உன்னைப்பற்றிச் சந்தேகம் கொள்ளாத எனக்கு உதவலாகாதா?' என்ற பொருளினை

'கணையொன்றாலே ஏழ் மா மரமும்
எய்த எம் கார் முகிலே'
திருவா. (9-1-2)

என்ற தொடர் உள்ளடக்கியிருக்கின்றது. கார் முகில்-கருமையான மழை பெய்யும் மேகமே! என்று விளிப்பது அக்கருத்தினை வலியுறுத்துவதாகும்.

இராமன் இலங்கை முழுவதையும் அழித்தது சரிதானா? என்ற கேள்வி எழுப்பின் அதற்கு ஆழ்வார் தரும் விடை,

'இலங்கை அரக்கர் குலம் முருடு
தீர்த்த பிரான்
(திருவா. 2-7-10)

என்பதே.

கொடிய அரக்கரையே இராமன் அழித்தான். அக்குலத்தவர்களுடைய முருடு-முரட்டுத்தன்மையையே தீர்த்தான். விபீடணன் முதலிய நல்லோரை அவன் அழிக்கவில்லை என்பதே அவர் உணர்த்தும் கருத்து. மேலும் இத்தொடர் அவ்விறைவன் இவருடைய இந்திரியங்களினுடைய மாறான செயல்களைமட்டும் போக்கினதாகக் குறிப்பாற் பொருள் கொள்ளுமாறு பாடல் அமைகின்றது.

இவ்வாறு இராமாவதார நிகழ்ச்சிகளையும் அவற்றின் நுட்பக் கருத்துக்களையும் ஆழ்வார் பாடல்களில் கண்டு மகிழலாம். இராமபிரானை ஒப்பற்ற வணக அவர் காட்டும் திறனையும் அறிந்து இன்புறலாம். ★

# நித்தர் உறையும் நிழல்!

திரு. தி. எஸ். குமரன், பி. எஸ்ஸி.
சேலம்.

யார் அறிவார் எங்கள் அண்ணல்
பெருமையை
யார் அறிவார் அந்த அகலமும்
நீளமும்
பேரறியாத பெருஞ்சுடர் ஒன்றதன்
வேரறியாமல் விளம்புகின்றேனே
உரையற்ற தொன்றை உரை செயும்
ஊமர்காள்

—திருமூலர்

தன்மை யாரும் அறிவாரில்லை

—திருஞான சம்பந்தர்.

அகார காரணத்திலே அனேக அனேக
ரூபமாய்
உகார காரணத்திலே உருத்திரிந்து
நின்றவன்
மகார காரணத்திலே மயங்கி நின்ற
வையகம்
சிகார காரணத்திலே தெளிந்ததே
சிவாயமே.

—சிவவாக்கியச் சுவாமிகள்.

## முன்னுரை :

மனித சிந்தனைக்கும், விஞ்ஞானத் திற்கும் அப்பாற்பட்ட ஒரு மாபெரும் சக்தியின் செயலை உய்த்துணர்ந்த அடியார்களின் கூற்றுப்படி, எல்லா வற்றையும் கடந்து நிற்பதும், எல்லா வற்றிலும் இயைந்து நிற்பதும், எல்லா வற்றிலும் தனித்து விளங்குவதும், எவ்வெவ்வாற்றலுக்கும் கட்டுப் படாமல் வலிந்து நிற்பதும் ஆன செயல்களை ஆராய, உருவமற்ற தென்று பரம்பொருளைச் சொல்வதா, உருவோடு கொள்வதா என்ற வினா எழா நிற்கிறது. ஆறுக் உருவம் அருவம் எல்லாம் மானிட சம்பாஷணை யின்பாற்பட்டது. தீர்க்கதரிசிகளுக்கு லிங்கமும் சிவம்; கருங் கல்லும் சிவம்; காட்சி அகம் புறம் என்று பிரித்துணரும் பேதமை உலக மானிடர்க்கு பலவினையாகும்; புவன யோகிகளுக்கு இதுவோ பல்வேறு கோயிலாகும்; கிருஷ்ணனை கீதை யிலும் காண்பர்; வெறும் போதை யிலும் காண்பர்; (கிருஷ்ணார்ப்பணம் என்ற உயர்ந்த கோட்பாட்டை செய லில் கொள்ளும்போது) பிரகலாத னுக்கு நஞ்சிலும் அஞ்சேல் என்று பரந்தாமன் சொல்லவில்லையா? அப் பருக்கு தப்பாமல் கொடிய தண்டனை யினின்றும்விடுதலை அளிக்கவில்லையா? மாணிக்கவாசகரை கொடிய அநீதி யினின்று காக்கவில்லையா? இவை அனைத்தையும் ஒருசேரக் காணுவோ மாயின், மனித நிலை, சமயம், சிந்தனை, ஆராய்ச்சி, ஞானம் ஆகியவற்றிற் கெல்லாம் அப்பாற்பட்டு தனுகரண புவன போகங்களால் தான் தாக் குறுது, சுத்த அசுத்த பிரகிருதி மாயைகளை ஆட்சிசெலுத்தி அவற்றிற் கெல்லாம் கடந்து நிற்கும் கடவுளின் நிலை இரண்டாகப் பேசப்படும்.

## 1. சொரூபம் :

குணம் குறி நிறங்கள் இன்றி வாக் கையும் மனத்தையும் கடந்து நிற்கும் பரந்த பரத்வ நிலை.

## 2 தடத்தம்:

இயற்கையையே உடலாகக் கொண்டு அருள் குணம் கொண்டு நிற்கும் சகுண சாந்தநிலை.

இவ்வாறு நாதபிந்து கலாதி ரூப மாயும் 96 வகை தத்துவங்களின் காரி யாதிகளுக்குத் தனுகரண புவன போகங்களைச் செலுத்தி, அவற்றால் தாக்குறாது எல்லையற்ற பரம்பொரு ளாய் நிற்கும் அரிய சக்தி எளிய மாந் தர்க்கு உருவவடிவமாய், விருக்ஷ தெய்வமாய், தொன்றுதொட்டு இஷ்ட தேவதையாய், இயற்கைக் கோயிலகத்ததாய் தன்னைச் சாதாரண உருவத்தில் அமைத்துக் கொண் டிருக்கும் சாந்த சொரூபியை எப்படி வர்ணிப்பது!

இறைவன் மூங்கிலில் தோன்றியதை

'வேயீன்ற முத்தம் இனிதோ மொழி
கென்றான்
முத்திருக்கண் அத்தன் வடிவு
இதுவே ஆம்'

என்று சொற்படுத்தும்.

இறைவருக்கு நிழல் அளிக்கும் வண்ணம் ஒவ்வொரு தல விருட்சங் களைப்பற்றிக் 'கடம்பர் கோயில் உலா' வும், 'சொக்கநாதர் உலா' வும் பொருட்படுத்தும். உதாரணமாகக் கடம்பு அடர்ந்து காணப்படுவதால் மதுரை ஆனது; தில்லை மரம் மிகுந்து மீறுவதனால் தில்லை ஆனது; வேல மரம் நிறைந்து காணுதலால் திருவேற்காடு' திரு ஆலங்காடு திருப் பானுங்காடு ஆயிற்று; ஆர் எனும் அத்தி மீதுறலால் ஆர்க்காடு ஆயிற்று. பாதிரி மலிந்து காணுதலால் பாதிரிப் புலியூர் ஆயிற்று. இவ்வாறு விருக்ஷங் களின் மிகுதி குறித்து ஈசனும் இஷ்ட

தெய்வங்களும் உறைந்த விருக்ஷக் கோயில்கள் பல்கிப் பெருகிக் காணுகின்றன.

## விசேஷமான விருக்ஷத் தலங்கள் :

இயற்கையே மாபெரும் சக்தியென்று கொள்வோமாயின் ஈசனும் எளியோரின் தாசனே; துர்க்கையும், முனியும், மாலும் கனியும் நேசமே; விநாயகனே ஜனநாயகனாக எங்கும் எழுந்தருளி அருள் பாலிக்கிறார். அரச மரத்தடியுறையும் நேசன் அவன். இவ்வாறு தென்னகத்தே சூழும் தலங்களைக் கூறிட்டு விருக்ஷ சேத்திரங்களாகக் காணப்புகுவோம்.

| | |
|---|---|
| நாவல் | – திருவானைக்காவல். |
| தேமா | – காஞ்சி, நாகை, மாந்துறை. |
| தில்லை | – சிதம்பரம், கருகாவூர் |
| பலா | – திருக்குற்றாலம், திருப்பூவணம், நாலூர் |
| பனை | – திருப்பனையூர், திருவோத்தூர், திருப்பனந்தாள். |
| பராய் | – திருப்பராய்த்துறை |
| பாலை | – திருப்பாலைத்துறை |
| புன்னை | – திருமயிலை, அம்பர், புகலூர். |
| புன்கு | – திருப்புன்கூர் |
| புளி | – உறங்காப்புளி (ஆழ்வார் திருநகரி) காஞ்சிபுரம் |
| பாதிரி | – திருப்பாதிரிபுலியூர், அவிஞசி. |
| மகிழ் | – திருவண்ணாமலை, நீடூர், திருவொற்றியூர் |
| மருது | – திருவிடைமருதூர். |
| மூங்கில் | – திருநெல்வேலி, பாசூர் |
| வன்னி | – பேணுபெருந்துறை, திருமறைக்காடு, பட்டீச்சுரம், பாம்புரம். |
| வாழை | – திருப்பைஞ்ஞீலி, திருக்கழுக்குன்றம் திருமருகல், தேனூர். |
| வில்வம் | – ஓமாம்புலியூர், திருவெஃகா. |
| இலந்தை | – கீழ் வேளூர், திருநணா (பவானி) |
| கல்ஆல் | – காளத்தி, திருவாலங்காடு, ஆலம்பொழில். |
| கடம்பு | – மதுரை, கடம்பூர், கடம்பர் கோயில் |
| கொன்றை | – கடவூர், பந்தணை நல்லூர், வைகாவூர், திருப்பத்தூர், கொள்ளம் பூதூர், முக்கீச்சுரம் (உறையூர்). |
| குருந்து | – தண்டலைநீள்நெறி, திருப்பெருந்துறை |
| ஆத்தி | – திருச்சிற்றேமம், ஆப்பாடி, செங்காட்டாங்குடி. |

கவி காளமேகம் தமது திருவானைக்காவுலாவில் அரிவை பருவத்தினள் உலாவரும் தலைவரிடம் தன்னைப்பறி கொடுத்த நிலையில் கலுழ்ந்து பாடியனவாகப் பல்வேறு விருக்ஷம் பற்றி குறிப்பிட்டுள்ளார். பாடல் வருமாறு:

'' நீணிலத்து
ஐந்து நிலமும் அமைந்து கிளர் காவின்
வந்து வளர் தேமாவை மாமலைழைமூந்திய கல்
லாக வடத்தை அருச்சுனத்தை ஆத்திதனைப்
பாலையை வேயைப் பலாத்தன்னை நீலிலைய
புன்னையைக் கூவிளையைப் புன்கைப் புனக் கடம்பை
வன்னியைக் கொன்றையை மாதளையைத் தன்னைச்
சினைதரு பாதிரியைத் தில்லையைக் காயாப்
பனையை இலந்தையப்பராயைப்புனைகுருந்தை
நெல்லியை நோக்கினள் நித்தருறை நீழலெலாச்
சொல்லியவற்றைத் தொழுதிட்டாள்.'

மேற்சொன்ன பாடலில் பயிலாத விருக்ஷங்களோ சொல்பமே; நித்தர் உறைகின்ற நீழல் மரங்கள் என்று சொன்னமாத்திரத்தில் அவைகளைத் தொழுதாள் அப்பெண் என்றால், ஷேத்திராடனம் செய்து வந்தவரைத்

தரிசிக்கும் பக்தனைப்போல் நெக்குருகி நிற்கும் அவனது எண்ணத்தை நிறை வேற்ற மனங்கொடுத்து உதவும் ஈசார்ப்பணம் போன்றது அல்லவா இம்முறை? எளியோர்க்கு எளியோன் எம்பெருமான் எம்பிரான் என்பதில் ஐயம் என்ன உள்ளது?

## சிறப்புக்கள்:

பாலன் முருகன் கடம்ப மலர் மாலையை மகிழ்ந்து அணிவான்; கடம்ப மலர் செந்நிறம் கொண்டது. சிவமும் செம்மை; சிவப்பழமான குமர னும் செம்மையில் மனம் திளைத்ததில் 'கடம்பு உறைவோன்' ஆகின்றான். கடம்ப மரத்தில் குடியிருக்கும் அன் பன் குமரன், கடம்பன் ஆகி தன் னில்லத்தை வலம் வரும் பக்தர்களுக்கு அருள் பாலிக்கின்றான்.

காடுகளில் அனேக விருக்ஷங்கள் படர்ந்து இருக்கின்றன. காடுகளில் உறைபவள் துர்க்கை; வீரமாதா அவள்; அஞ்சேல் என்று வேடர்களுக்கு தேவதை ஆகின்றாள்; கடுமையான பாலைவனத்திலும் சோலை வனமாய் காட்சி தருகின்றாள் அன்னை துர்க்கா தேவி; கானகத்தில் அமர்ந்து வெற்றி தரும் செல்வி; காடுகளுக்குத் தேவி; கான்-அமர் செல்வி, கானமர் செல்வி; சக்தி தேவி உறையும் பதி காடுசூழும் கொற்றம்.

தெய்வத் தமிழில் சிவச்சின்னமான சிவலிங்கத்திற்கு 'காந்தளி' என்று சிறப்புப் பட்டம் உண்டு. பல்கி பெரு கிய பல வடிவுச் சின்னம்-உருப்பெற்ற பல அவதாரம் விரிந்து காணப்படு வதால் தாமரை வடிவு-தெய்வத் தாமரை வடிவம் அத்தகு ஜோதிஸ்வ ரூபத்திற்கு உண்டு.

வடநாட்டில் தென்னையைத் திகழும் 'ஸ்ரீ' வடிவமாய் வழிபாடு செய் வர். 'SRIPHALA' கனியும் ஸ்ரீ தேவியின் கனி-தெங்கு; கொழிக்கும் செல்வத்திற்கு அதி தேவதை அவள்; சொர்ணலட்சுமி உறையும் விருக்ஷம் தென்னை.

வேங்கை மரம் வரம்போடு அழ வளையை அறிவிக்க உதவும் திசா. ஞானி; அதன் செவ்வாய் எரிந்து பட்ட சொல்லப் படுவதால் 'கரி வாய் வேங்கை.' வேங்கையை வழி பட நெருங்கும் அருளுடைச் செல்வம்: கொழிக்கும் சாதுபடி இன்றும்.

கற்பக மரம் உண்மை வடிவில் இப் பூவுலகில் இல்லை. ஆனால் வாகன மாகவோ சப்பரமாகவோ கோயிலில் அதன் உருவம் மட்டும் செதுக்கப் பட்டிருப்பதை நாம் கண்ணுறலாம். ஊர்வலமாகவரும் உற்சவ மூர்த்திக்கு வாகன உருவங்கள் கற்பக வடிவு கொண்டு அமைத்திருக்கக் காணலாம்.

ஈசனுக்கு ஈசன் தட்சிணாமூர்த்தி தெற்குமுகம் பார்த்து சாந்த சொரூபி யாகத் தத்வ ஞானியாக தவயோகி யாகக் கிண்ணத்தில் நீருடன் ஆலமரத் தடியில் யோக நிஷ்டை செய்யா நிற்பான். அவன் முதுமை தாயுமான சுவாமிகள்,

'கூந்தலுடன் பிரிதலற்று நீர்த்
தொந்தமாய்க்
நுவிதலுடன் விரிதலற்றுக்
துணைமற்று வரவிறெந் போக்கற்று
நிலையான
தழியற்று மலமுமற்று
நாந்தலுமற்று மேல் கீழ் நடுப் பக்க
மென
நண்ணுதலுமற்று விந்து
நாதமற்றவகைப் பூத பேதமுமற்று
ஞாதுருவின் ஞானமற்று
வாடுதலுமற்று மேல் ஒன்றற்றிரண்
டற்று
வாக்கற்று மனமு மற்று
மன்னுமரி பூரணச்சுக வாரி
தன்னிலே
வாய் மடுத்துண்ட வசமாய்த

'தேடுதலு மற்றவிட நிலை யென்ற
மௌனியே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா
மூர்த்தியே
சின்மயானந்த குருவே'

என்று பாடுகின்றார்.

அடியார்க்கு அடியாரான தத்வ ஞானி, திருமாலின் வாரிசு மகிழ்ந்து அடைக்கலமாக போதி புத்தரைப் போல் ஞான ஒளி ஏற்ற இடம் 'புளிமா' அன்றோ? ஆழ்வார் திருநகரியில் இன்றும் புனிதத்தலமாகப் பேசப்படுகின்றது.

'செத்தது வயிற்றில் சிறியது
பிறந்தால்
எத்தைத் தின்று எங்கே கிடக்கும்'
என்ற தத்வ வினாவிற்கு சட்டென்று,
'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்'

என்ற மொழியைப் பகர்ந்தவர் நம்மாழ்வார். உயிர் - உடல் - காரண காரிய தத்வ சித்தாந்த விளக்கம் இது.

## செயல்கள்:

வேம்பிற்கும் அரசிற்கும் திருமணம் செய்யும்வண்ணம் அவ்விரண்டு மரங்களையும் அருகருகே நட்டு வளர்த்து செழிப்புற ஓங்கச் செய்து, அங்கே நாகப் பிரதிஷ்டை செய்வித்து இச் சடங்கை நிறைவேற்றும் தொண்டர்களுக்கு சந்தானமும் சம்பத்தும் பெருகிக் கொழிக்கும். இது தொன்று தொட்டு நடந்துவரும் ஒரு வகை சம்பிரதாயம்.

மேலும் அக்காலப் பாடல் ஒன்று மலராத மரங்களை மலர்விக்கும் சக்தி இளம் பெண்களுக்கு இருப்பதாகத் தெரிவிக்கின்றது. மாதவி, சண்பகம், பாலை, புன்னை, எழிற் பாடலி, கொன்மை, மகிழம், மரா, அசோகு, குரா என்னும் பத்து மரங்களும் மலரா விடில் இளம் பெண்கள் பண் பாடல், நிழல் படம், நட்டல் ஆடல் போன்ற பத்துவகைச் செயல்களைச் செய்யின் செழித்து மலருமாம்!

## தத்வம்.

சர்வவியாபி, நிரஞ்சனன், அரூபி, நிரூபன் போன்ற உருவமற்ற தன்மையில் உள்ளடங்குவதாலும் அசலன், ஆதி, ஏகன், முதலோன், அனாதி போன்ற தனித்தன்மையில் ஏகத்வம் பெற்றிருப்பதாலும், அம்மாபெருஞ் சக்தி தெய்வீக விருக்ஷங்களிலும் குடிகொண்டிருக்கும் என்பதில் ஐயம் என்ன இருக்கிறது. சக்தி சிவத்தன்மை பெற்று சிவசக்தி ஆவது போல், உருவேற உருவேற உச்சரணைகள் இதய அர்ச்சனைகளாக மாறுவது போல், தனக்குள்ளே பரம்பொருளை ஐக்யப்படுத்தி உள்ளொளியில் வழிபாடு செய்கையில் கட்டுண்டு கிடக்கும் பரம்பொருள் தானே ஆவது போல் ஏன் பரமன் விருக்ஷங்களில் கோயில் கொள்ளக்கூடாது? விருக்ஷங்களை வலம்வர பரமனை வலம் வந்ததுபோல் ஆகாது போகாதே; ஐம்பூதங்களாகக் காட்சியளிக்கின்றான்; ஏன் விருக்ஷங்களில் குடி கொள்ளக் கூடாது?

(உ-ம்) நடராஜனின், பயன் கருதாத் தொண்டே நிஷ்காமியக் கர்மம் என்னும் தெய்விக நிலை. இது கிட்ட நடராஜனை வழிபாடு செய்தல் வேண்டும். ஆன்மா சார்ந்ததன் வண்ணமாவது, ஆன்மா நடராஜனை வழிபட வழிபட அவன் தன் இயல்பாகிய பயன் கருதாமை ஆன்மாவைத் தன் வண்ணமாக்கும். மண், நீர், காற்று, தீ, வெளி (ஆகாயம்) ஆக ஐம்பெரும்பூத வடிவமாயும் இறைவன் இலங்குகின்றான். இவற்றை உலகம் அறியச் செய்யத் திருக்கோயில்களின் மூலாதாரமாக இவ்வடிவு கொண்டு கோயில் கொள்கின்றான். ஒவ்வொரு கோயில்களிலும் தல விருக்ஷமும் சிறப்புற போற்றப்படுவது மேற்சொன்ன உவமைக்குப் பொருந்தும். தென்னகத்தே ஐம்பெரும்வடிவ உருவக் கோயில்கள் முறையே,

| | |
|---|---|
| திருவாரூர் | — மண் |
| திருவானைக்கா | — நீர் |
| திருவண்ணாமலை | — தீ |
| திருக்காளத்தி | — காற்று |
| திருத்தில்லை | — ஆகாயம் |

என்று போற்றி பக்தர்கள் வழிபாடும் செய்யும் மாபெரும் புனிதத் தலங்களாகப் பேசப்படுகின்றன. ஆகவே கடவுள் தன்மை விழுமியது; எல்லையற்றது; உருவமற்றது.

ஈஸ்வரன் எங்கும் நிறைந்திருப்பவரானால் நம்மால் ஏன் அவரைப் பார்க்க முடியவில்லை? பாசியும் நாணலும் மிகுந்திருக்கும் குளத்தின் கரையில் நின்றுகொண்டால் அக்குளத்தில் ஜலமே இல்லையென்றுதான் நீ சொல்வாய். ஜலத்தைக் காணவேண்டுமானால் குளத்தின் மேற்பரப்பிலிருந்து பாசியை அகற்ற வேண்டும். மாயையாகிற திரையால் மூடப்பட்ட கண்களையுடைய நீ ஈசுவரனைக் காணமுடியவில்லையென்று குறை கூறுகின்றாய். அவரைக்காண வேண்டுமானால் உனது கண்களிலிருந்தும் மாயையாகிய திரை அகற்று.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்.

'அண்ட மெழுகோடி பிண்ட மெழு
கோடி
தெண்டிரை சூழ்ந்த திசைகளெழு
கோடி
எண்பிசை சூழ்ந்த இலிங்கமெழு
கோடி
அண்டன் நடஞ் செய்யும் ஆலயந்
தானே'

—திருமூலர். ★

# திருவரங்கக் கலம்பகமும்

திரு. N. [illegible], M.A.,
Dip. in Ling.,
திருப்பதி.

# நாலாயிரத் திவ்ய பிரபந்தமும்

## தோற்றுவாய்:

நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தின் சாரம் என்று கருதப்படும் அஷ்ட பிரபந்தத்தை இயற்றியவர் தெய்வ கவி எனப் போற்றப்படும் அழகிய மணவாள தாசர் என்கிற பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் ஆவார். திருமங்கை என்னும் திருப்பதியில் அவதரித்த இவர், ஆழ்வார்களின் பாசுரங்களில் தம் உள்ளத்தைப் பறிகொடுத்து, அவற்றின் பக்திச் சுவையிலே திளைத்து ஆழங்கால்பட்டு-மகிழ்ந்தார். இதனால் இவர் பாடிய பாடல்களில் ஆழ்வார் பாசுரங்களின் சாயல் நிழலிடுகிறது. நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தின் கருத்துக்களும், சொற்றொடர்களும் அய்யங்காரின் அஷ்ட பிரபந்தத்தில் மிளிர்வதை நாம் காணலாம். அஷ்ட பிரபந்தத்தில் ஒன்றான திருவரங்கக் கலம்பகம் என்னும் நூலில் காணும் நாலாயிரத்தின் செல்வாக்கைச் சிறிது காட்டுவேன்.

## ஆழ்வார் வணக்கம்:

எம்பெருமானின் திருக்குணங்களில் எப்பொழுதும் ஈடுபட்டுப் பாடல் பாடித் துதிப்பவர்கள் ஆழ்வார்கள். திருமாலின் மங்கள குணங்களாகிய அமுத வெள்ளத்தில் மூழ்கி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுவர் என்ற காரணத்தால் அவர்கட்கு ஆழ்வார்கள் என்ற திருநாமம் ஏற்பட்டது என்று கூறுவர் அறிஞர். தான் இயற்றும் கலம்பகம் என்னும் நூலுக்கு வரும் இடையூறுகளையெல்லாம் போக்கி பாதுகாப்பர் என நினைத்து ஆழ்வார்களை வணங்குகிறார் அய்யங்கார். அப்பாடல் வருமாறு:

" வேதந் தொகுத்துத் தமிழ்ப்பபாடல்
செய்த
விமலன் பொய்கை
பூதன் மயிலைப்பிரான் புகழ்ச்சேரன்
புத்தூரன் தொண்டர்
பாதந் தருந்துகள் மாமழிசைக்குமன்
பாணன் மங்கை
நாதன் மதுரகவி கோதை
பாதங்கள் நண்ணுதுமே "

*(திருவரங்கக் கலம்பகம்: காப்பு)*

*[நண்ணுதல் - இடைவிடாது நினைத்தல்]*

## திருமாலின் திவ்விய தோற்றம்:

'ஆயிரவாய்ப் பாம்பணைமேல் அறிதுயிலில் இனிதமர்ந்த' திருமாலின் திவ்விய தோற்றத்தை எடுத்துச்சொல்லும் பாடலில், திருமாலைச் சுற்றிப் பாதுகாத்து நிற்கும் படையை விவரிக்கிறார் அய்யங்கார். சிறகுகளை உடைய பெரிய திருவடி என்று கூறப்பெறும் கருடன் திருமாலுக்குப் பக்கத்திலேயே பாதுகாப்பாக நிற்கிறது; சேனையோ எம்பெருமானின் ஏவலுக்குக் காத்துக் கிடக்கின்றது; மணம் வீசுகின்ற திருத்துழாய் மாலை கிடந்து புரளுகின்ற எம்பெருமானின் திருமார்பிலே கௌஸ்துப இரத்தினம் சூரியனைப் போல பிரகாசிக்க, வெற்றி காண்பதற்கு அரிய அசுரர்களை அழித்தருளிய ஐந்து ஆயுதங்களும் இரண்டு பக்கங்களிலும் நின்று காத்து வருகின்றன. இதை,

" சிறைப் பறவை புறம் காப்ப,
சேனையர் கோன் பணி கேட்ப
நறைப் படலைத துழாய் மார்பில்
நாயிறு போல் மணி விளங்க,
அரிய தானவர்க் கடிந்த ஐம்படையும்[1]
புடை தயங்க "[2]

1. (ஐம்படை - 1. சக்கரம், 2. சங்கு 3. கதை, (கதாயுதம்), 4. வில், 5. வாள்).

2. (திருவரங்கக் கலம்பகம்: 1)

என்று குறிப்பிடுகிறார். இக்கருத்து,

" கோலார்ந்த நெடுஞ்சார்ங்கங் கூனற்
சங்கம்
கொலையாழி கொடுந்தண்டு
கொற்ற வொள்வாள்
காலார்ந்த கதிக்கருட னென்னும்
வென்றிக்
கடும்பறவை இவையனைத்தும்
புறஞ்சூழ் காப்ப "

*(பெருமாள் திருமொழி: 1:8)*

*[சார்ங்கம் - வில்; சங்கம் - சங்கு; ஆழி - சக்கரம்]*

என்னும் குலசேகராழ்வார் பாசுரத்தை ஒட்டியே கூறப்பட்டுள்ளது எனலாம்.

## பெருமானைப் புகழ்தல்:

எம்பெருமானது புகழையே அனைவரும் போற்றிப்புகழ்கின்றனர். அதைப் பின்பற்றியே அய்யங்காரும் போற்றுகின்றார்.

" போற்றுவார் போற்றுவதுன் புகழ்ப்
பொருளே; யாதலினால்
வேற்றுவாசகம் அடியேன்
விளம்புமாறு அறியேனால் "

*(திருவரங்கக் கல்பகம்: 1)*

'உன்னைப் போற்றித் துதிக்கும் அடியவரெல்லாம் உனது புகழாகிய பொருளையே துதிக்கின்றனர். வானத்திலிருந்து வரும் மழைநீர் இறுதியில் கடலில் சென்று கலப்பது போல, எந்தத் தேவரைக் குறித்துச் செய்யும் தோத்திரமும் நாராயணனையே சேரும் என்பதை அறிந்தவனாதலால், அடியேனும் மரபிலிருந்து விடுபட விரும்பி, புதுமையாகப் புகழத் தெரிந்து கொள்ளவில்லை' என்னும் கருத்தமைந்த மேற்குறிப்பிட்ட பாடல்,




# ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், திருப்பதி

## தினசரி நிகழ்ச்சி நிரல்

| | | | | |
|---|---|---|---|---|
| சுப்ரபாதம் | 5-00 A.M. | முதல் | 5-30 A.M. | வரை |
| விஸ்வரூப சர்வ தரிசனம் | 5-30 A.M. | ,, | 7-00 A.M. | ,, |
| சுத்தி | 7-00 A.M. | ,, | 7-30 A.M. | ,, |
| தோமால சேவை | 7-30 A.M. | ,, | 8-00 A.M. | ,, |
| அர்ச்சனை (ஆர்ஜிதம்) | 8-00 A.M. | ,, | 8-30 A.M. | ,, |
| முதல்மணி, சாத்துமுறை | 8-30 A.M. | ,, | 9-00 A.M. | ,, |
| சர்வ தரிசனம் | 9-00 A.M. | ,, | 12-30 P.M. | ,, |
| இரண்டாவது மணி | 12-30 P.M. | ,, | 1-00 P.M. | ,, |
| சர்வ தரிசனம் | 1-00 P.M. | ,, | 6-00 P.M. | ,, |
| தோமாலசேவை, இரவுமணி | 6-00 P.M. | ,, | 7-00 P.M. | ,, |
| சர்வ தரிசனம் | 7-00 P.M. | ,, | 8-45 P.M. | ,, |
| ஏகாந்தசேவை | 9-00 P.M. | | | |

ஒவ்வொரு பௌர்ணமி நாளன்றும் பூலங்கி சேவை நடைபெறும்.

### கட்டணம் செலுத்தி நடத்தப்படும் சேவைகள்

| | |
|---|---|
| தோமால சேவை (நபர் ஒருவருக்கு) | ரூ. 4–00 |
| அர்ச்சனை | ரூ. 3–00 |
| ஹாரத்தி | ரூ. 1–00 |

### ஸ்ரீ கோவிந்தராஜர் கோயில் வாகனங்கள்

| | |
|---|---|
| கருட வாகனம் | ரூ. 32–00 |
| சந்திரப்பிரபை வாகனம் | ரூ. 32–00 |
| யானை வாகனம் | ரூ. 32–00 |
| குதிரை வாகனம் | ரூ. 32–00 |
| சிம்ஹ வாகனம் | ரூ. 32–00 |
| ஹனும வாகனம் | ரூ. 32–00 |
| சிறிய சேஷ வாகனம் | ரூ. 32–00 |
| பெரிய சேஷ வாகனம் | ரூ. 62–00 |
| சர்வ பூபால வாகனம் | ரூ. 62–00 |
| சூர்யப் பிரபை வாகனம் | ரூ. 62–00 |

'' ஓதுவார் ஓத்தெல்லாம்
எவ்வுலகத் தெவ்வெவையும்
சாதுவாய் நின்புகழின்
தகையல்லால் பிறிதில்லை;
போதுவாழ் புனந்துழாய்
முடியினாய், பூவின்மேல்
மாதுவாழ் மார்பினாய்
என்சொல்லியான் வாழ்த்துவனே?

(திருவாய்மொழி: 3.1.6)

[ஓத்து - வேதம்; தகை - பெருமை] என்னும் நம்மாழ்வார் பாசுரத்தை அடியொற்றி அமைந்து உள்ளது நோக்கத் தக்கது.

## உயிருக்கும் உயிரானவன் :

உலகில் உள்ள அனைத்து உயிருக்கும் உயிராய் விளங்குபவன் எம்பெருமான் என்று புகழ்கிறார் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார். இவ்வுலகில் வாழும் கணக்கிலடங்காத ஜீவாத்மாக்களுக்கு எல்லாம் உயிராய் – அந்தராத்துமாவாய் – மறைந்து, உள்ளும் வெளியும் பரவி நிற்பவன் எம்பெருமான் என்று புகழ்வது அவனுடைய பெருமைக்கு எல்லையாகுமா? என்று கேட்கிறார் திவ்விய கவி. அப்பாடல் வருமாறு:

'' கருதரிய உயிர்க்குயிராய்க்
கரந்து எங்கும் பரந்துஉறையும்
ஒருதனி நாயகம்என்றால்
உன்புகழ்க்கு வரம்பாமோ ''

(திருவரங்கக் கலம்பகம்-2)

[கருதரிய - நினைப்பதற்கும் அருமையான; கரந்து - மறைந்து, பரந்து - பரவி; தனிநாயகம் - ஒப்பு உயர்வு அற்ற தலைமைப் பொருள்]

இந்தப் பாடல்,

" திடவிசும்பு எரிவளி நீர்நிலம்
இவைமிசை
படர்பொருள் முழுவது மாய்அவை
அவைதொறும்
உடல்மிசை உயிர்எனக் கரந்து
எங்கும் பரந்துளன் ''

(திருவாய்மொழி: 1.1:7)

[விசும்பு - ஆகாயம்: எரி - நெருப்பு: ஒளி - காற்று)

என்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழியை ஒத்துள்ளதை ஒப்பு நோக்கும் போது தெளிவாக அறியக் கிடக்கிறோம். ஆத்மாக்களை அளவிட்டுச்

சொல்லமுடியாது; ஆகவே 'கருதிய உயிர்' என்று கூறுகிறார் அய்யங்கார்.

### அடியார் பெருமை:

'தென்னிலங்கைத் திசை நோக்கித் திருநயனந் துயிலும்' திருவரங்கத்து நாதனைப் போற்றித் துதிக்கும் அடியார்களைத் தாங்கள் மதித்து வணங்குவதை வைணவர்கள் ஒரு மரபாகக் கொண்டிருக்கின்றார்கள். அடியார்களின் குலம், பிறப்பு இவற்றைப்பற்றி வைணவர் நினைப்பதே இல்லை. தொண்டரடிப்பொடியாழ்வார் — அச்சுவை வேண்டாது அரங்கனைப் பாடியவர் — இயற்றிய இரண்டு பாசுரங்கள் மேற் கூறும் கருத்துக்குச் சான்று பகருகின்றன.

'' பழுதிலா வொழுக லாற்றுப்
பலசதுப பேதி மார்கள்
இழிகுலத் தவர்க ளேலும்
எம்மடி யார்க ளாகில்,
தொழுமினீர் கொடுமின் கொள்மின்!
என்றுநின் னோடும் ஒக்க
வழிபட அருளி னய்போன்ம்
மதிள்திரு வரங்கத் தானே ''

(திருமாலை: 42)

[சதுப்பேதிமார் - சதுர்வேதிமார்; நால் வேதங்களையும் அறிந்தவர்]

இறைவனுக்கு அடிமையாக வாழ்வதிலேதான் பெருமை; பிறப்பில் இல்லை. இறைவனை வணங்கும் அடியாரும் வணங்குவதற்கு உரியவரே எனத் தொண்டர்களை வழிபட்டு உய்ய இறைவனே நெறிகாட்டியதாக மேலே சொன்ன பாசுரத்தில் பாடுகிறார் ஆழ்வார். சாதியிலே அந்தணராக இருந்தாலும் இறைவனை வணங்கும் அடியார்களைப் பழித்தால், பழித்த நிமிடமே அந்த அந்தணர் இழிந்த சாதியினராவர் என்பதை அடுத்த பாசுரத்தில் குறிப்பிடுகின்றார்:

'' அமரவோ ரங்க மாறும்
வேதமோர் நான்கும் ஓதி
தமர்களில் தலைவ ராய
சாதியந் தணர்க ளேலும்,
நுமர்களைப் பழிப்ப ராகில்
நொடிப்பதோ ரளவில், ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்
அரங்கமா நகரு ளானே! ''

(திருமாலை: 43)

[தமர் - உறவினர்; புலையர் - இழிந்த சாதியினர்; நுமர் - உன் அடியார் (உம்மவர்)]

வைணவ குலத்தில் தோன்றிய அய்யங்காரும் ஆண்டவனின் அடியாரை வணங்கும் மரபைத் தவறாது கையாண்டுள்ளார். அழுகிப் போன கையையும் காலையும் உடையவராயினும், இழிந்த குலத்தில் பிறந்து பழித்தற்குரிய தொழிலைச் செய்பவர் என்றாலும், 'சேஷசயனம் உடையவனே' என்று எம்பெருமானைத் துதிப்பாராயின் அவர்கள் தாம் வணங்குவதற்குரிய அடியவராவர் என்கிறார். அதுபோலவே, உயர்ந்த குலத்தில் பிறந்து ஒழுக்கத்தாலும் வேதங்களாலும் சிறந்து விளங்கினாலும், எம்பெருமான் பள்ளி கொள்ளும் திருவரங்கத்தை வணங்கித் துதிக்காதவர்கள் சண்டாளர்களாகக் கருதப்படுவர் என்னும் கருத்தமைந்த பாடல் இது:

'' பாதியாப் அழுகியகால் கைய ரேனும்
பழிதொழிலும் இழிகுலமும்
படைத்தா ரேனும்
ஆதியாப் அரவணையாய் என்ப ராகில்
அவரன்றோ யாம்வணங்கும்
அடிகள் ஆவர்
சாதியால் ஒழுக்கத்தான்
மிக்கோ ரேனுஞ்
சதுர்மறையால் வேள்வியால்
தக்கோ ரேனும்
போதினன் முகன்பணியப் பள்ளி
கொள்வான்
பொன்னரங்கம் போற்றுதார்
புலையர் தாமே ''

(திருவரங்கக் கலம்பகம்: 15)

[போதில் நான்முகன் - தாமரையில் தோன்றிய பிரமன்]

தொண்டரடிப் பொடியாழ்வாரைப் பின்பற்றியே அய்யங்காரும் இப்பாடலைச் செய்துள்ளார் என்பது புலப்படுகிறது. எம்பெருமானுக்குத் தொண்டு புரியும் அடியவரின் மேன்மைக்குக் காரணம்; உயர்குலப் பிறப்பன்று என்னும் உயரிய கருத்து ஆழ்வாரிடையேயும் அய்யங்காரிடையேயும் எழுந்தது உணர்ந்து போற்றுதற்குரியது.

### கோயிலரங்கம் பணிவீர்:

உடலை வருத்தி அநதல் எம்பெருமானைப் பெறவேண்டும் என்று எண்ண வேண்டாம் என்று கூறும் அய்யங்கார் அவனை அடைதற்குரிய உபாயத்தையும் சொல்லுகின்றார்:

'' காப், இலை தின்றும், கானில்
உறைந்தும், கதி தேடித்
தீ இடை நின்றும், பூவலம் வந்தும்,
திரிவீர்கள்!
தாயினும் அன்பன், பூமகள் நண்பன்
தடநாகப்
பாயல் முகுந்தன், கோயில்
அரங்கம் பணிவீரே ''

(திருவரங்கக் கலம்பகம்: 18)

[பூ மகள் நண்பன்-திருமகளுக்கும் நில மகளுக்கும் கணவன்; தடநாகப்பாயன் -பெரிய சர்ப்பசயனத்தை உடையவன் கோயில் அரங்கம்-திருவரங்கம் பெரிய கோயில்]

பகவத்பிராப்திக்கு விரோதமான சரீர சம்பந்தங்களைத் துறந்து எம்பெருமானைப் பெற விரும்பிக் காய் இலை

## அறிவிப்பு

சந்தாதாரர்கள் தங்களுடைய சந்தாத் தொகையினை ஒவ்வொரு மாதத்தின் 15ஆம் தேதிக்குள் மார்க்கெடிங் ஆபீஸர், பப்ளிகேஷன் செக்ஷன், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி என்ற முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். அப்போதுதான் அவர்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து 'ஸப்தகிரி' பத்திரிகையை தொடர்ந்து அனுப்ப ஏதுவாக இருக்கும். இருப்பில் பிரதிகள் இருப்பின் அம்மாதத்திலிருந்து (பணம் அனுப்பும் மாதத்திலிருந்து) ஸப்தகிரி பத்திரிகைகள் அனுப்பி வைக்கப்படும். எம். ஓ. கூப்பனில் புதிய சந்தாதாரர்கள் எந்த மாதத்திலிருந்து பத்திரிகை வேண்டும் என்பதைத் தெளிவாக எழுதுதல் வேண்டும். தொடர்ந்து தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளும் சந்தாதாரர்கள் மறக்காமல் எம். ஓ. கூப்பனில் தங்கள் சந்தா எண்களை குறித்தல் வேண்டும். ஸப்தகிரி மற்றும் தேவஸ்தான வெளியீடுகளுக்கான தொகையினை 'மார்க்கெடிங் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம் பிரஸ் காம்பௌண்டு, திருப்பதி' என்ற முகவரிக்கு அனுப்புதல் அவசியம்.

தின்று காட்டில் திரியாதீர்கள்; விரதங்களை மேற்கொள்ளாதீர்கள்; சோலைக் காலத்தில் வெயிலிலும், மாரிக்காலத்தில் நீரிலும் பசியுடன் நின்று உடலை வருத்தாதீர்கள்; அடியவர்க்கு அருள் புரியும் எம்பெருமான் பிராட்டியருடன் வந்து பள்ளி கொண்டருளும் திருவரங்கத்தைச் சென்று சேர்ந்தால் அவனை எளிதில் பெறலாம்; ஆகவே உடனே விரைவாகத் திருவரங்கம் சேர்வீர்' என அறிவுறுத்துகிறார் அய்யங்கார். இக்கருத்து, திருமங்கையாழ்வாரின் பாசுரத்திலும் காணப்படுகிறது.

" காயோடு நீடு கனியுண்டு வீசு
கடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம்
ஐந்து
தீயோடு நின்று தவஞ்செய்ய வேண்டா
திருமார்ப னைச்சிந்தை யுள்வைத்து
மென்பீர் "

(பெரிய திருமொழி: 3.2;2)

எனவே, ஆழ்வார் பாசுரத்தின் செல்வாக்கு அய்யங்கார் பாடலில் காணப்படுகிறது என்பது வெளிப்படை.

## இரும்பு உண்ட நீர்:

பழுக்கக் காய்ச்சிய இரும்பில் நீரை ஊற்றினால் அந்நீர் இரும்பிலே கலந்து விடும். அதுபோல எம்பெருமானிடத்து அன்பு பூண்டு அடிமையாகித் தாம் உய்ந்து போய் விட்டதாகத் திருமங்கை ஆழ்வார்,

" இரும்பனன் றுண்ட நீர்போல்
எம்பெருமா னுக்கு, என்றன்
அரும்பெற லன்பு புக்கிட்
டடிமைபூண் டுய்ந்து போனேன் "

(திருக்குறுந்தாண்டகம்: 5)

என்ற பாசுரத்தில் தெரிவிக்கின்றார். இரும்பு உண்ட நீர்போல, தன் நெஞ்சமானது திருவரங்கத்துநாதனின் திருவடிகளில் லயிப்பது எந்த நாளோ? அப்படி ஒன்றுவதால் பிறவி வேண்டாம் என்று விரும்புகிறார் அய்யங்கார் திருமங்கையாழ்வாரின் வழியைப் பின்பற்றி,

' அ நம் புண்டரீகத்து அடி இணைக்கே
நெஞ்சம்
இரும்பு உண்ட நீர் ஆவது என்றோ? "

(திருவரங்கக் கலம்பகம்: 95)

என்று பாடுகிறார் திவ்விய கவி.

## திருவடியும் நெஞ்சமும்:

வாமனனாக அவதாரம் எடுத்து வந்த திருமால், மகாபலி சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் கேட்டான். இரண்டு அடிகளால் பூமி வானம் இரண்டையும் அளந்து விட்டான். அத்தகு பெருமைக்கு உரிய திருவடிகளைத் தன் நெஞ்சு தன்னுள் அடக்கிக் கொண்டதாக நம்மாழ்வார் பாடுகின்றார். 'வானமும் பூமியும் உனக்குச் சொந்தம்; ஆனால் நீ என்னுள்ளே இருப்பதால் எனக்குச் சொந்தம்' என்கிறார்.

" புவியும் இருவிசும்பும் நின்னகத்த,
நீஎன்
செவியின் வழிபுகுந்துஎன்னுள்ளாய்—
அவிவின்றி
யான் பெரியன் நீபெரியை என்பதனை
யாரறிவார்,
ஊன்பருகு நேமியாய்! உள்ளு "

(பெரிய திருவந்தாதி: 75)

என்பது அவருடைய பாசுரம். இதை அடியொற்றி, 'எம்பெருமானது திருவடிகள் உலகங்களை எல்லாம் தன் ஈரடிக்குள் அடக்கிவிட்டதால் மிகப்பெரியன; அவற்றை என் நெஞ்சு தன்னுள் அடக்கிக் கொண்டிருத்தலால், என் நெஞ்சே அத் திருவடிகளை விடப் பெரியது' என்கிறார் அய்யங்கார்.

" சேவடியால் மூஅடிமண், தென்
அரங்கத்து அம்மான்! நீ
மாவலிபால் வாங்கியநாள்
மண்உலகோ—மூவுலகும்
விசும்காலோ வலியவெவ் வினையேன்
நெஞ்சமோ
பேசுங்கால், ஏதோ பெரிது? "

(திருவரங்கக் கலம்பகம்: 29)

[சேவடி - சிவந்த திருவடிகள்; மண் உலகம் - பூலோகம் (நிலவுலகம்), மாவலி - மகாபலி சக்கரவர்த்தி]

அதாவது, பக்தியில் திளைப்பதற்குரியனவற்றில் குறைகள் உடையவனாக இருந்தாலும், எம்பெருமானுடைய திருவடி எப்பொழுதும் நெஞ்சில் நினைத்துப் போற்றி வருகின்றேன் என்று சொல்லாமல் உணர்த்துகிறார் கவிஞர்.

## மாயன் மேல் மாலுறும் மங்கை:

அகப்பொருள் கருத்துக்களை உள்ளடக்கியும் பாசுரங்களைப் பாடினர் ஆழ்வார் பெருமக்கள். அதைப் பின்பற்றியே பிள்ளைப் பெருமாள் அய்யங்காரும் பல பாசுரங்களைப் பாடியுள்ளார். இரங்கல் எனும் அகத்துறையில் அமைந்த ஒரு பாடலைக் காண்போம். தலைவனைக் கண்டதும் காதல் கொண்ட தலைவி, களவு வாழ்க்கைநடத்துகிறாள். புணர்ச்சிக்குப் பின்னர் தலைமகனுடன் சென்று விட்டாள் தலைமகள் என்பதைக் கேள்விப்பட்ட செவிலித்தாய் (வளர்ப்புத் தாய்), 'தலைவனுடன் உடன்போக்கு நடத்தும் அளவுக்கு வயது ஆகவில்லையே' எனத் தலைவிக்காகச் செவிலி இரங்குகின்றாள் என்பதாகப் பாடல். 'தாய்ப்பால் குடித்ததால் ஏற்பட்ட பால்மணம் இன்னும் அவளது வாயில் இருந்து நீங்கவில்லை; கூந்தல் வளரவில்லை; என் கையே அவளுக்குப் படுக்கை. அப்படிப்பட்டவள் தலைவனுடன் பாலை நிலவழியில் செல்ல எவ்வாறு துணிந்தாள்?' எனச் செவிலி இரக்கம் கொள்வதாக,

" முலைகொண்ட பால்மணம் வாய்
மாறிற்றில்லை:
அம் மொய் குழலோ
அலைகொண்டது; இன்னம் என்கை
அணையே;
அலை ஆழி வற்றச்
சிலைகொண்ட செங்கை அரங்கேசர்
தாள்கொண்ட தேசம் எல்லாம்
விலைகொண்ட வாள்விழியாள்
சென்றவாறு
எங்ஙன், வெஞ் சுரமே? "

(திருவரங்கக் கலம்பகம்: 82)

என்று அய்யங்கார் இயற்றியுள்ளார்.

இப்பாடலின் கருத்து,

" வாயில் பல்லும் எழுந்தில
மயிரும் முடிகூ டிற்றில,
......................................
மாயன் மாமணிவண்ணன் மேல்இவள்
மாலுறு கின்றாளே "

(பெரியாழ்வார் திருமொழி: 3.7:2)

என்ற பெரியாழ்வார் பாசுரத்தையும், நம்மாழ்வார்(இயற்பா—திருவிருத்தம்; 60) பாசுரம் ஒன்றின் கருத்தையும் உள்ளடக்கி நிற்கிறது.

கார்காலத்தில் திரும்பி வருவதாகச் சொல்லிச் சென்றான் தலைவன். கார்காலம் வந்து விட்டது; ஆனால் தலைவன் வரவில்லை. 'விண்ணைத் தொடும் மலை மீது வானம் மழையைப் பொழி

24 ஆம் பக்கம் பார்க்க

# கீதை காட்டும் நல்வழி



## அத்தியாயம் – 9
## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

பகுதி — 3

இறைவன் மனித உருக்கொண்டு நம் முன்னர் தோன்றினால் நம்மால் அவரைப் புரிந்து கொள்ள முடியுமா? பகவானே இதற்கு அழகாகப் பதில் அளிக்கிறார்:

**அவஜானந்தி மாம் மூடா**
**மானுஷீம் தனுமாச்ரிதம்**
**பரம் பாவமஜானந்தோ**
**மம பூத மஹேஸ்வரம் ||11||**

'என்னுடைய பரசொரூபத்தையும் உயிர்களுக்கெல்லாம் நான் ஈசனாயிருப்பதையும் அறியாத மூடர்கள் ஒரு மானுட வடிவம் எடுத்தவன் நான் என்று எண்ணி என்னை அவமதிக்கின்றனர்'

இறைவன் மனித உருக்கொண்டு உலகில் தோன்றுவதை அவதாரம் என்கிறோம். ராமர், கிருஷ்ணன், ராமகிருஷ்ணர், ரமணர், சுவாமி சிவானந்தர் போன்றோர் அவதார புருஷர்கள் ஆவர். அவதார புருஷர்களை எல்லோராலும் அடையாளம் கண்டு கொள்ள முடியாது. ஏன்? அதற்கு மனத் தூய்மை வேண்டும். ஸ்ரீராமசந்திர மூர்த்தியை அவதாரம் என்றுணர்ந்து போற்றி வழிபட்டவர்கள் அவரது காலத்தில் பன்னிரண்டே முனிவர்கள் தானும். மற்றவர்கள் எல்லோரும் ஸ்ரீராமனை வெறும் தசரத ராமனாகவோ, கோஸல ராமனாகவோ, சீதா ராமனாகவோ, கோதண்டராமனாகவோ தான் கண்டார்கள். இறைவனை இறைவனாக அடையாளம் கண்டு கொள்வதற்கு நம்மிடம் உள்ள சிற்றறிவு அகன்று பேரறிவு மலர வேண்டும். பேருணர்வே பரம்பொருளைக் கண்டு கொள்ளும்.

ஏசுநாதர் இறைவனின் திருத்தூதர் என்பதை உணர்ந்தவர்கள் அவரது காலத்தில் பன்னிரண்டே பேர்தானும். சுவாமி சிவானந்தர் இருபதாம் நூற்றுண்டு கண்ட பேரவதாரம். மக்களோடு மக்களாய் வாழ்ந்த அவரது ஒவ்வொரு செயலிலும் சொல்லிலும் அவதார மகிமை வெளிப்பட்டது. ஆனால் அவரை அவ்வாறு உணர்ந்தவர் எத்தனை பேர்? குழந்தைகளுக்கிடையே குழந்தையைப் போலவும், கற்றோருக்கிடையே கற்றவரைப் போலவும், மகான்களுக்கிடையே மகானைப் போலவும் காட்சி தந்த அவரது மகிமையை தூய மனம் படைத்த ஒரு சிலரே உணர்ந்தனர். மற்றவர்கள் அனைவரும் 'அவர் ஒரு பெரிய மகான்' என்று கருதிப் போற்றினர். மகான்களும் சாதாரண மக்களைப் போலவே செயலில் ஈடுபடினும் செயல் புரியும் மனோ பாவத்தில் அவர்களிடையே மக்களுக்கும் மடுவுக்குமிடையேயான பெருத்த வேறுபாடு உண்டு. மகான்கள் கர்மபலனில் பற்றற்றவர்கள். சாதாரண மக்களோ கர்ம பலனில் கட்டுண்டு கிடப்பவர்கள். மகான்கள் முக்தர்கள். சாதாரண மக்களோ பக்தர்கள். அதாவதுகட்டுப்பட்டவர்கள். எனவே அறியாமையில் சிக்குண்டு தவிக்கும் மக்கள் மனிதஉருவில் தோன்றும் இறைவனது மகிமை தெரியாது அவரை வெறும் மானிடனாகவே கருதி மயங்குகின்றனர்.

---

திரு. டி. கே. நாராயணன், M.Sc.,
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை.

---

''எனவே அர்ஜுனா! இந்தப் பிறப்பிறப்பு போதும். என்னை அடைய வேண்டும் என்ற எண்ணம் உனக்கு இருக்குமேயாகில் இந்தச் சீரிய தத்துவத்தை நீ நன்கு புரிந்து கொள்'' என்கிறார் பகவான். மஞ்சள் காமாலையினால் வருந்தும் ஒருவனுக்குக் காண்பதெல்லாம் மஞ்சளாகத் தென்படுவது போல, காய்ச்சலால் வருந்தும் ஒருவனுக்கு ருசியான பாலும் கசப்பது போல, வெறும் ஊனக் கண்களால் இறைவனைப் பார்க்க முயன்றால் அது முடியாத காரியம் ஆகும். கனவில் ஒருவன் அமிருதத்தைக் குடிப்பதாகக் கருதினால், அது அவனுக்கு அழியாப் பெருநிலையை அளிக்குமோ? கானல்

நீரை கங்கையெனக் கருதி அங்குமிங் கும் மான் அலைக்கழிந்தால் அதனது தாகம் என்றாவது தீருமோ? அதுபோல இறைவனை மனித உருவில் காண்பவர், அவரை ஒரு வெறும் மானிடனாகவே கருதுவார்களேயாகில், அதனால் எவ் விதப் பயனையும் அடையமாட்டார் கள்.

அவதார புருஷர்களை சாதாரண ஜனங்களால் புரிந்து கொள்ள முடி யாது என்பது மட்டுமல்ல. பலர் அவர்களை அவமதிக்கவும் முற்படுவர். அத்தகைய மக்களின் இயல்பு எத்த கையது? பகவான் கூறுகிறார்.

மோகாசா மோக கர்மாணோ
மோகக்ஞானா விசேதஸ:|
ராக்ஷஸிமாஸுரீம் சைவ
ப்ரகிருதிம் மோஹினீம் ச்ரிதா:||12||

'வீண் ஆசையுடையவர்கள், பயன் படாத கர்மம் புரிபவர்கள், கோணல் புத்தியுடையவர்கள், விவேகமில்லாத வர்கள் மோக மூட்டும் ராக்ஷஸ அசுர இயல்பை அடைகின்றனர்'

சாதாரண மக்களது புத்தியானது ஓர் இடத்தில் நிலைத்திருப்பது அரிது. கிளைக்குக்கிளை தாவும் குரங்கைப் போல அவர்களது புத்தியானது ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றியே நிற்கும். இத்தகைய மக்கள் அவதார புருஷர்களை அணுகும் பொழு தும் கூட சுயலாப நோக்கத்திலேயே தான் கண்ணும் கருத்துமாயிருப்பர். ''இந்த மகானை அணுகினால் எனது வியாபாரத்தில் இவ்வளவு லாபம் உண்டாகுமா? எனது மகளுக்கு நல்ல இடத்தில் திருமணமாகுமா? எனது மகன் தேர்வில் தேர்ச்சி பெற்று பெரிய வேலையில் அமருவானா? அதற்கு இந்த மகான் எனக்கு உதவி செய்வாரா?'' என்று இத்தகைய லௌகிக ஆசைகளை மூட்டை மூட்டையாக மனத்தில் சுமந்து கொண்டு மகான்களை சாதாரண அறி வுடைய மக்கள் அணுகுகின்றனர். இத் தகைய வியாபார புத்தியுடையவர்கள் அவதார புருஷர்களின் மகிமையை எங்ஙனம் உணர முடியும்?

நமது மனதின் தன்மைக் கேற்ற வாறு தான் நாம் உலகைப் பொருள் படுத்துகிறோம். அசுர இயல்புடைய வர்கள் உலகில் எங்கும் தீமையே நில வியிருப்பதாகக் காண்கிறார்கள். மாறாக தெய்வ இயல்பு படைத்த மகான்கள் இறைவனை எங்கும் எதிலும் நிறைந் திருப்பதாகக் கண்டு இன்புறுகிறார்கள். நல்லதும் கெட்டதும், அடிப்படையில் ஆராய்ந்து பார்த்தால் புறத்தே இல்லை நம் அகத்தில்தான் இருக்கிறது. நமது உள்ளத்தைத் தூய்மைப் படுத்துகின்ற அளவு நாம் உலகிலும் தூய்மையை உணருகிறோம். இதைப் பகவான் கீழ்க் காணும் சுலோகத்தில் விளக்குகிறார்.

மஹாதமானஸ்து மாம் பார்த்த
தைவீம் பிரகிருதிம் ஆஸ்ரிதா:
பஜந்த்யனன்ய மன ஸோ
ஞாத்வா பூதாதிமவ்யயம் ||13||

''பார்த்தா, தெய்வ இயல்பை உடைய மகான்கள் அனைத்தினுடைய அழியாத ஆதாரமாக என்னை உணர்ந்து ஒருமித்த மனதுடன் என்னை வழிபடு கின்றனர்''

வழிபாடு எப்படி அமையவேண்டும் அல்லது எது சிறந்த வழிபாடு என்ப தற்கு இங்குப் பகவான் ஒரு அழகான விளக்கம் தருகிறார்.

अनन्य मनसो भजन्ति அதாவது அனன்ய மனதுடன் எவர்கள் வழிபடுகிறார்க ளோ அவர்கள் தான் பகவானை உள்ள வாறு உணர முடியும். (अनन्य) 'அனன் யம்' என்ற வார்த்தையானது இறை வனைத் தவிர வேறு எதைப் பற்றியும் எண்ணாத ஒரு பெருநிலையைக் குறிக்கி றது.

இறைவனைக் குறித்து நாம் பண் ணும் பக்தி பல வேளைகளில் பலனளிக்

# ஓர் அறிவிப்பு

கி. பி. 15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தத் தெலுங்கு இசைக் கவிஞரும், அவ்வேழு மலை களில் நின்றவண்ணம் கோலம் கொண்டிருக்கும் வேங்கடவனின் சிறந்த பக்தருமான ஸ்ரீ தாள்ள பாக்க அன்னமாச்சார்யார் அவ்நெடியோன் மீது பக்திச் சுவையும் காதற்சுவையும் மிக்குஒளிர 32,000 கீர்த்தனைகளை இயற்றியுள்ளார். அன்னாரின் அச்சீர்மைமிகு கீர்த்தனைகளின் புகழ் எங்கும் பரவும் வகையில் அக்கவிஞரின நினைவாக, திருப்பதியில் ரூ 4.5 இலட்சம் செலவில் 'ஸ்ரீ அன்மாச்சார்யா கலாமந்திரம்' ஒன்று கட்டப்பட்டுள்ளது. தற்போது அக்கலா மந்திரத்தில், சமயப்பற்றும் ஆன் மீகப்பற்றும் எங்கும தழைததோங்கும் வகையில் நூலகம் ஒன்று திறக்கப்பட்டுள்ளது. இந்நூலகத் திற்கு இந்து சமயம, புராணம் மற்றும் இந்தியக் கலாசாரம சம்பந்தப்பட்ட பத்திரிகைகள், நூல்கள் பக்தர்களிடமிருந்து இலவசமாக வரவேற்கப்படுகின்றன. மக்கள் சேவையே மகேசன் சேவையாகக் கொண்டு, இப்புனித சேவையில் பங்கேற்று அவ்வெல்லாம் வல்ல அலர்மேல் மங்கை உறைமார்பனின் அருளைப்பெறுவீர்களாகுக!

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

கவில்லையே என்பது தான் நம்மில் பலருடையவும் மனக்குறையாகும். அதே வேளையில் நாம் பண்ணும் பக்தி யானது த்வாரகா நாதனாகிய கண்ணனைக்கூவியழைத்த திரௌபதியின்பக்தியைப் போலுள்ளதா, அல்லது 'ஆதி மூலமே' என்று கதறி அழைத்தகஜேந்திரனின் பக்தியைப் போல உள்ளதா என்பதுபற்றியும்நம்மைநாமேகேட்டுக் கொள்ளவும்கடமைப்பட்டிருக்கிறோம். அப்பொழுது நமது அடி மனம் நம்மைப் பார்த்துச் சொல்லும்: ''திரௌபதி எங்கே! நீ எங்கே! உன் மனத்தில் மூட்டை மூட்டையாக ஆசைகளை வைத்துக் கொண்டு இறைவனைத் தாற்காலிகமாக உனது உதவிக்கு அழைக்கும்உன்போலிபக்திஎங்கே? அனைத்தையும் துறந்து தங்களையே மறந்து இறைவனே கதி எனக்கதறிய பிரஹ்லாதன், மார்க்கண்டேயன் போன்ற மகாபக்த சிகாமணிகள் எங்கே?'' இத்தகைய நமது அடிமனத்தின் குரலுக்கு நாம் செவி சாய்க்கையில் நம்மைப் பற்றிய யதார்த்த நிலை நமக்குப் புலனாகத் தொடங்கும். அதனது உதவியுடன் நாம் மேலும் முன்னேற வாய்ப்பு தோன்றும்.

இத்தகைய மகான்களைப் பற்றிய விளக்கம் மேலும் தொடர்கிறது.

ஸததம் கீர்த்தயந்தோ மாம
யதந்தஸ்ச த்ருட விரதா:|
நமஸ்யந்தஸ்ச மாம் பக்த்யா
நித்ய யுக்தா உபாஸதே ||14||

''எப்பொழுதும் என் புகழைப் பாடுவோர்கள், திட உறுதியுடன் என்னை அடைய வேண்டும் என முயல்வோர்கள் என்னையே யாண்டும் சார்ந்திருந்து என்னை வழிபடுகின்றனர்''

ஆபத்துக் காலத்தில் உதவிக்கு இறைவனை அழைப்பது, பின்னர் சுகமாக இருக்கும் காலத்தில் அவனை மறந்து களியாட்டத்தில் ஈடுபடுவது என்பது நல்லபக்தனுக்கு அழகாகாது. எவ்வாறு பதிவிரதையான பெண் ஒருத்தி இன்பத்திலும் துன்பத்திலும் கணவனைப் பிரியாது நிற்பாளோ, அது போல சிறிய பக்தன் எழ்மையிலும் செழிப்பிலும் எந்த நிலையிலும் இறைவனே கதி என்று உறுதியாகப் பற்றி நிற்பான். இனிய பண்டத்தில் ஒரு சமயம், அருவருப்பான மலத்தில் மற்றொரு சமயம் என்று மாறி மாறி அமரும் விட்டு ஈயைப் போலல்லாது, சதா தேன் உள்ள பூவையே நாடும் தேனீயைப் போல இறைவனையே எப்பொழுதும் அண்டி நிற்பவன் உயரிய பக்தனாவான்.

பக்தனின் நிலை இதுவெனின் ஞானியின் நிலையோ மற்றொரு போக்கில் சிறந்ததாக அமைகிறது. இறைவனைக் குறித்துச் செய்யப்படும் நற்கருமங்கள் யக்ஞங்கள் எனப்படுகின்றன. யக்ஞங்களில் சிறந்ததாக ஞானயக்ஞம் அமைகிறது. ஞானயக்ஞம் என்பது இறைவன் எங்கும் எதிலும் நிறைந்துள்ள பரிபூரணப் பரம்பொருள் என்ற தத்துவத்தில் மனதை எப்பொழுதும் லயித்திருக்கச் செய்தலேயாகும். எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் என்பதற்கேற்ப இத்தகைய உயரிய எண்ணத்தில் ஒருவன் லயித்திருக்கின்ற அளவு ஒருவன் இறை மயமாகிறான். இத்தகைய ஞானவான்கள் இறைவனை ஒன்றாயும், பலவாயும், உலகெங்கும் காணும் திறம் படைத்தவர்களாகிறார்கள்.

மனமானது எந்தத் துறையில் முயல்கிறதோ அந்தத் துறையில் மேன்மையடைகிறது. எதைப் புகழ்கிறதோ அதன் மயமாக ஆகிவிடுகிறது. எதை விரும்பி வணங்குகிறதோ அதனது இயல்புகளைப் பெறுகிறது. பக்தர்கள் தங்களது மனதை சதா பகவானிடம் செலுத்துகின்றபடியால் அவர்கள் நித்திய யோகிகள் ஆகின்றார்கள். யாண்டும் பகவானுக்கருகில் வீற்றிருப்பவர்களாகவும் ஆகின்றார்கள்.

ஞான யக்ஞம் செய்பவர்கள் இறைவனை எங்ஙனம் உபாசிக்கின்றனர் என்பதைப் பகவான் கூறுகிறார்:

ஞான யக்ஞேன சாப்யன்யே
யஜந்தோ மாம் உபாஸதே|
ஏகத்வேன ப்ருதக்த்வேன
பஹுதா விச்வதோ முகம் ||15||

''ஞான யக்ஞத்தால் வேள்வி செய்பவர்கள் ஏனையவர்களும் என்னை ஒன்றாய், வேறாய், பலவாய் இத்தனை விதங்களில் உபாஸிக்கின்றனர்''

எது ஞான யக்ஞம்?

பரம் பொருளை உள்ளபடி அறிபவர்கள் தங்களையே பரம் பொருளுக்கு வேள்விப் பொருளாகக் கொடுத்து விடுகிறார்கள். 'அயமாத்மா பிரம்ம' 'அஹம் பிரம்மாஸ்மி' என்ற மகா வாக்கியங்கள் கூறுவது போன்று ஜீவ போதத்தை அறவே இழந்து பரத்துடன் ஒன்றி விடுதலே ஞான யக்ஞமாகும்,

பரத்துக்கும் ஜீவனுக்கும் உள்ள இணக்கம் பொதுவாக மூன்று வகைப்படும். அதாவது பகவானுக்கும் பக்தனுக்கும் உள்ள தொடர்பானது பக்தனின் மனபரிபாகத்திற்கேற்ப மூன்று நிலைகளில் அமைகிறது. அதற்கேற்ப சாதனை முறைகளும் அமைகின்றன. இவற்றை அத்வைத, விசிஷ்டாத்வைத, த்வைத நிலைகள் எனலாம். இந்த மூன்று நிலைகளையும் பகவான் இந்தச்சுலோகத்தில் மூன்று வார்த்தைகளால் குறிப்பிடுகின்றார். 'ஏகத்வேன ப்ருதக்த்வேன, விச்வதோ முகம்' என்பனவே அந்த மூன்று பதங்களாகும்.

ஏகத்வேன (एकत्वेन) ஒன்றாய் என்கின்ற அத்வைத பாவனை **एकं सत् विप्रा बहुधा वदन्ति** —'உள்ளது ஒன்றே. அதை அறிஞர் பலவாறாகக் கூறுகின்றனர்' என்பது மறை மொழி. உண்மையில் உள்ளது பரம்பொருள் ஒன்று தான். ஏனைய அனைத்தும் அதன் தோற்றம் என்பது அத்வைத சித்தாந்தம்.

ப்ருதக்த்வேன (पृथक्त्वेन) வேறாய் இருக்கும்த்வைதபாவனை. ஆண்டவன்-அடிமை, பகவான்—பக்தன் என்னும் த்வைத சித்தாந்தத்தின் படி ஜகத், ஜீவன், பரம் ஆகிய மூன்றும் அனாதியானவைகள். ஜகத்தையும், ஜீவனையும் ஆளுபவர் பரம் பொருள். ஜகத்

தும் ஜீவனும் யானேடும் பரத்திலிருந்து வேறுபட்டவைகள். பகவானுடைய அருளால் உலகிலிருந்து ஜீவன் விடுபட்டு ஜீவன் முக்தி அடைய முடியுமே தவிர, அந்த முக்தி நிலையிலும் ஜீவனும் பரமும் வேறாகத் தான் இருக்கும் என்பது த்வைத சித்தாந்தம்.

விஸ்வதோ முகம் (विश्वतोमुखम्) பலவாய் உள்ள எல்லா உறுப்புக்களும் ஒரே புருஷனைச் சார்ந்தவைகள் என்ற விசிஷ்டாத்வைத பாவனை.

விசிஷ்டாத்வைதம் என்பது ஒரு விசேஷத்துடன் கூடிய அத்வைதம் எனப் பொருள்படுகிறது. கடவுள் ஒருவர் தான் இருக்கிறார். இந்த ஜகத் அவரது உடல். அந்த உடலில் எண்ணற்ற உயிர்த் தத்துவங்களாயிருப்பது ஜீவன். சூரியனிடமிருந்து கணக்கற்ற கிரணங்கள் வெளிப்படுவது போன்று எண்ணற்ற ஜீவர்கள் பரமாத்மாவின் கிரணங்கள் ஆகின்றனர். பரமாத்மாவைப் பூரணன் என்றும் அதில் தான் ஓர் அம்சம் என்றும் ஜீவன் தன் அனுபவத்தால் உணருவது முக்தி. அந்த முக்தி நிலையை அடைய ஒரே வழி ஜீவன் தன்னைப் பரிபூரணமாக பகவானிடத்தில் சரணாகதி அடைதலேயாகும். இதற்குப் பிரபத்தி என்று பெயர். இது விசிஷ்டாத்வைத சித்தாந்தம்.

கொள்கையளவில் இவை வேறாகத் தென்பட்டாலும் அடிப்படையில் இவை பக்தனின் சாதனையில் வெவ்வேறு நிலைகளே என்பதை நாம் நன்கு மனதில் கொள்ளவேண்டும். நெடுங்காலமாக இந்த மூன்று சித்தாந்தங்களைப் பின்பற்றுபவரிடையே வேற்றுமை மனப் பான்மை நிலவி வருகிறது.

பக்தியின் ஆரம்ப நிலையில் பக்தனின் மனம் பக்குவப்படாதிருக்கையில் பகவான் சர்வசத்குண சம்பந்நன், தான் குணக்கேடன் என்று பக்தன் உணருகிறான். அதனால் தான் வேறு, பகவான் வேறு என்ற எண்ணத்தில் அவன் நிலைபெற்றிருக்கிறான். அப்போழுது அவன் த்வைதியாகக் காட்சி தருகிறான்.

சாதனையில் அதாவதுபக்தி மார்க்கத்தில் மேலே செல்லச் செல்ல தனது மனத்தின் கண் உள்ள காமம், குரோதம் போன்ற பல மாசுகள் ஒவ்வொன்றாக அகலுவதைக் காண்கிறான். அப்போழுது பரமாத்மனிடம் உள்ள பல நற்குணங்களின் அம்சங்கள் தன்னிடமும் இருப்பதைக் கண்டு தான் பரம்பொருளின் ஓர் அம்சம் என்பதை உணருகிறான். அந்த நிலையில் அவன் ஒரு விசிஷ்டாத்வைதியாகக் காட்சி தருகிறான்.

சாதனையில் தீவிரமாகச் செல்லுகையில் அதாவது மனத்தை முழுவதுமாக வென்ற நிலையில் பரம்பொருளுக்கும் தனக்கும் எந்த விதமான பேதமும் இல்லை என்னும் அபேதநிலையை அடைகிறான். அப்பொழுது அவன் அத்வைதியாகி விடுகிறான்.

ஆகிய பக்தன் எந்த முறையில் பகவானை வழிபட்டாலும், இறுதியில் எல்லாம் பகவானே என்ற உயரிய ஞானம் கைவரப் பெறுகையில் அவன் ஞான யக்ஞம் புரிந்தவன் ஆகின்றான். அனைத்து மார்க்கங்களும் போய்ச் சேரும் இடம் ஒன்று தான் என்பதைப் பகவான் இந்தச்சுலோகத்தில் அழகாக எடுத்து விளக்குகிறார். (தொடரும்)

---

20-ம் பக்கத் தொடர்ச்சி

யும் வேகம் போல, கண்கொண்ட என் முலைகள் மீது கண்கள் நீரைச் சொரிகின்ற இக்கார் காலத்தை மறந்து விட்டாரோ' எனத் தலைவி இரங்குவதாகத் திவ்விய கவியும் (திருவரங்கக் கலம்பகம்: 74 ) நம்மாழ்வாரும் பாசுரங்களை இயற்றியுள்ள ஒப்புமை அறியக்கிடக்கின்றது.

## எளிமையும் உயர்வும்:

எம்பெருமானது சௌலப்யத்தையும் பரத்துவத்தையும் இரண்டு பெண்கள் எதிராகக் கூறும் வகையில் அய்யங்காரும் திருமங்கையாழ்வாரும் பாசுரங்களை இயற்றியுள்ளார்கள். வெண்ணெய் திருடிய கண்ணன் இடைச்சியால் அடிக்கப்பட்டாலும், கயிற்றால் கட்டப்பட்டாலும் உருத்திரனும் பிரமனும் அறிய முடியாத வடிவத்தையுடைய பெருமையைக் கொண்டவன் என்பதே இவ்விரு கவிஞரும் சொல்ல வந்த கருத்தாகும்.

'' வண்ணக் கருங்குழல் ஆய்ச்சியால்
மொத்துண்டு
கண்ணிக் குறுங்கயிற்றால்
கட்டுண்டான் காணேடீ,
கண்ணிக் குறுங்கயிற்றால்
கட்டுண்டான் ஆகிலும்,
எண்ணற் கரியன் இமையோர்க்கும்
சாழலே ''

(பெரிய திருமொழி: 11.5:5)

[சாழல்-தோழி; மகளிர் விளையாட்டு] என்பது திருமங்கையாழ்வாரின் பாசுரம். இதை ஒட்டியே மணவாள தாசரும் (திருவரங்கக் கலம்பகம்: 92) பாடல் இயற்றியுள்ளார். இதனால் ஆழ்வார்களின்பாசுரங்களில் ஈடுபட்ட அவரது உள்ளம் வெளிப்படு வதை நாம் அறிகிறோம்.

## ஒற்றுமையுடையச் சொற்றொடர்கள் :

பாடலின் கருத்துமட்டுமில்லாமல், சொற்றொடர் ஒற்றுமையும் திருவரங்கக் கலம்பகத்திற்கும் நாலாயிரத்துக்கும் இடையே உண்டு என்பதைச் சில எடுத்துக் காட்டுகளால் காண்போம். அய்யங்கார் பாடலில் உள்ள 'ஆண் பெண் அலியலர்' (திருவரங்கக் கலம்பகம்: 26) என்னும் தொடர், 'ஆணல்லன் பெண்ணல்லன் அல்லாவலியுமல்லன் (திருவாய் மொழி: 2.5:10) என்ற திருவாய்மொழித் தொடரை ஒத்துள்ளது. 'கரவுஇல் முனிவனே' (திருவரங்கக் கலம்பகம், 67) என்னுந் தொடர் 'முனியேநான்முகனே'( திருவாய் மொழி: 10.10:1) என்னும் திருவாய் மொழித் தொடரையும், 'நஞ்சமு மமுதமும்' 'நரகும் வீடுமாய்' (திருவரங்கக் கலம்பகம்: 1) என்னும் கலம்பகத் தொடர்கள் முறையே 'விடமு மமுதமுமாய்', 'நரகுஞ் சுவர்க்கமுமாய்' என்ற திருவாய் மொழித் தொடர்களை ஒத்துள்ளன. இவை தவிர, இன்னும் பல ஒற்றுமையுடைய பாடல்களையும் தொடர்களையும் கண்டு தெளிய முடியும்.

## இறுவாய் ;

ஆழ்வார்களின் பக்திப் பாசுரங்களில் ஈடுபட்டு மகிழ்ந்த பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் தம் 'முன்னோர் பொருளைப் பொன்னேபோல் போற்றி அவற்றைத் தம்முடைய பாடல்களின் கருத்தாகவும் தொடராகவும் பயன் படுத்திக்கொண்ட அருமைப்பாட்டினை அஷ்ட பிரபந்தத்தில் காணலாம். 'மலர்தலை உலகத்துப் புலமை சான்ற' ஆழ்வார்கள் அருளிச் செய்த பாடல்களை மேற்கூறியவாறு அய்யங்கார் தமது பாடல்களில் பயன்படுத்திக் கொண்டதைக் காணும்போது, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் செல்வாக்கை வியந்து போற்றாமல் இருக்க முடியவில்லை.



# அனுமன் கதை



## 13. அஞ்சிலே ஒன்றை வைத்தான்.

புச்சகுச்ச ஸ்புரத்வீர ஜகத்தக்தாரி பத்தன ।
லோலல்லாங்கூல பாதேன மமாராதீந் நிபாதய ॥

*ஸ்ரீ ஹநுமந் லாங்கூலாஸ்த்ர ஸ்தோத்ரம்.*

*(வாலின் நுனியாகிய பூங்கொத்தில் பல வீரர்களைச் சுருட்டியவரே! சத்துருவின் பட்டினத்தில் தீவைத்தவரே! ஆடுகின்ற வாலாகிய அஸ்திரத்தால் எனது பகைவர்களை அடித்துத் தள்ளும்!)*

''இக்குரங்கைக் கொல்லுங்கள்!'' என்று இராவணன் கட்டளையிட்ட அளவில் கொலைத் தொழிலாளிகள் அனுமன் அருகிற் சென்றனர். அப்போது, அறமுணர்ந்த விபீடணன் அக்கொலைத் தொழிலாளர்களை 'நில்லுங்கள்!' எனக் கூறித் தடுத்தான். சபையிலிருந்த விபீடணன் தன் தமையனை இராவணனது கோபம் தணியுமாறு உண்மையும் மென்மையுமான சொற்சிலவற்றைக் கூறத் தொடங்கினான்.

''அறிவு ஆற்றல்களில் வல்லவனே! வேதங்கள் முற்றும் உணர்ந்தவனே! நீ பிரமதேவனது அன்புக்குப் பாத்திரமாகி வரங்கள் பலவும் பெற்றவன். இந்திரன் ஆளவேண்டிய மூவுலகங்களையும் ஆளுகின்ற பெருமைக்குரிய தலைவன் நீ! அப்படிப்பட்ட நீ, ''தூதாகவந்தேன்!'' என்று கூறுபவனைக் கொல்லத்துணியலாமா? மாதரைக் கொலை செய்தவர்களைப்பற்றி எவ்வுலகிலும் வரலாறுகள் உள. ஆனால், தூதரைக் கொலை செய்தவர்களைப்பற்றி எங்கேனும் கேட்டறிந்ததுண்டா? தூதரைக் கொன்றால் சான்றோர்கள் உன்னைப்பற்றி ஏளனமாகப் பேசமாட்டார்களா! இவனை அனுப்பியவர்கள் எங்கோ இருக்க, இவனைக் கொல்லுதல் இழுக்கில்லையா? இதனைக் கேள்விப்பட்டால் தேவர்களும், மூவர்களும் எள்ளி நகைக்கமாட்டார்களா? நம் தங்கையாகிய சூர்ப்பநகையையும் இராமலக்குமணர்கள் மானபங்கம் தான் செய்து அனுப்பினார்களேயல்லாது கொல்லவில்லை யென்பதை எண்ணிப்பார்! இவனைக் கொன்றால் நம் ஆற்றலைப் பகைவர்க்கு எடுத்துச் சொல்பவர் யார்?''

தம்பி கூறிய இச்சொற்களில் உண்மை இருப்பதை இராவணன் நன்றாக உணர்ந்து கொண்டான். எனவே, தீமைகளையே அனுமன் செய்திருப்பினும் அவனைக் கொல்லுதல் குற்றமென்று கருதினான். அனுமனை நோக்கி, ''நீ இவ்விடத்தில் கண்டவற்றையெல்லாம் கூறி இராம இலக்குமணர்களை விரைவில் இங்கு அழைத்து வா!'' என்று இராவணன் கூறினான்.

அங்கிருந்த அரக்கர்களை நோக்கி, ''இவ்வானரத்தின் வாலை அடியோடு அரியுமாறு சுட்டெரியுங்கள்! இந்நகர் முழுவதையும் சுற்றிக்காட்டி, நகரின் எல்லையைத் தாண்டிக் கொண்டு போய்த் துரத்தி விடுங்கள்,'' என்று கட்டளையிட்டான். அது கேட்ட அரக்கர்கள் ஆரவாரஞ் செய்து எழுந்தார்கள். அப்போது, அனுமன் உடலில் கட்டியிருந்த நாகபாசத்தை இந்திரசித்து விடுவித்தான். கயிற்றைக் கொண்டுவந்து அனுமனின் தோள்களைக் கட்டுமாறு இந்திரசித்து அரக்க வீரர்களுக்குக் கட்டளையிட்டான். வலிமை பொருந்திய கயிறுகள் பல கொண்டு அரக்கர்கள் அனுமனைக் கட்டியிழுக்கலானார்கள்.

அரக்கமகளிர் அணிந்திருந்த தாலிக் கயிற்றைத் தவிர, இலங்கை மாநகரில் உள்ள மற்றெல்லாக் கயிறுகளையும் கொண்டுவந்து அனுமனைக் கட்டினார்கள். அதுகண்டு அனுமன் மிகவும் மகிழ்ந்தான். ''பிரம்மாஸ்திரத்தை மீறுதல் எப்படி?'' என எண்ணியிருந்த அனுமனுக்கு இவர்கள் செய்கை பெரிதும் உதவியாக ஆயிற்று. தன் வாலைக் கொளுத்த முயன்ற அரக்கர்கள் செய்கையைக் கண்டு அனுமன், ''நீ இவ்வூரைக் கொளுத்துவாயாக!'' என்று அவர்கள் கட்டளையிடுவதாக எண்ணினான். தகுந்த சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டு உள்ளுக்குள் மகிழ்ந்திருந்தனன். அரக்கர்கள் கட்டிய கயிறுகளை அறுத்தெறியும் ஆற்றல் இருந்தும், அவர்களுக்குக் கட்டுப்பட்டு நடப்பவனைப்போல, அனுமன் அடக்கத்துடன் நடந்து கொண்டான்.

# திருவண்ணமலை தெய்வம்

திரு. எஸ். கோவிந்தராஜன்,
பவானி.

மஞ்சு சூழ் மாமலை மேல் மலர்ந்த திருமேனி காண
விஞ்சியதோர் ஆவலினுல் விரைந்து நான் நடந்து வந்தேன்
தஞ்சமென வந்தவர்க்கு அருள்புரியும் வேங்கடவா
எஞ்சிய தோர் துயரமில்லை நின்னருள் நோக்கினுல்

நெஞ்சத்தில் துயர் மேவி எதிர்காலம் புரியாது எங்கெங்கோ
அலைந்த போதும்
வஞ்ச மனத்தவர்கள் வாழ்வினில் என்னேடு வம்பு பல
செய்த போதும்
பஞ்சங்கள் பலவந்து பஞ்சாக என்னை மாற்றி பரிதவிக்க
விட்ட போதும்
வாவென எனை ஏற்றுத் துயர் நீக்கும் சுற்றங்கள் மனம் மாறிப்
போன போதும்
தஞ்சம் உன் பாதம் எனவந்தவனைச் சீராக்கி வளர்த்த
திருவண்ண இறையே
கோனேரி தாலாட்ட குன்றுதனில் நின்றருளும்திரு-
வண்ணமலை யுறை திருவே !!

காற்றினில் பறந்து வரும் வரமொன்று தருவாயேல்
உன் கோயில் நாடி வருவேன்
ஊற்றெனப் பெருகிவரும் கண்ணீரால் உன்பாதம்
உளமார நீராட்டுவேன்
சாற்றிடப் பூமாலையுடன் பாமாலை பல சேர்த்துக் கண்ணுரக்
கண்டு மகிழ்வேன்
ஏற்றிடும் தீபங்கள் என் நெஞ்சத்து விளக்காக எந்
நாளும் ஒளிரவிடுவேன்
பாரினில் பாவி நான் படும் துன்பம் காண்கையிலே
என்னைக் காத்த தேவ தேவே !!
காசினியில் உன் பெருமை பாடிடும் ஓர் வரமருள்வாய்
திருவண்ணமலை யுறை திருவே !!

உள்ளத்து ஆசைகள் ஒருகோடி அவையெல்லாம்
உன்னருளால் நிறைவெய்தும்
கள்ளமில்லா இப்பிள்ளை கவிஞனென உலகாளும்
காலமும் வந்து சேரும்
வெள்ளத்தின் ஓட்டத்தில் வேதனைகள் மறைந்தோடி
மகிழ்ச்சிகள் இங்கு பூக்கும்
பள்ளங்கள் மேடாகிப் பாதையும் சீராகிப் பயணங்கள்
தொடர்ந்து போகும்
எல்லாமும் உன்னருளால் என நான் மறவாமல்
எனைக்காக்க தேவ தேவே !!
வில்லி நகர்க் கோதையவள் வழிபடும் ஓர் பெருமை
பெறும் திருவண்ணமலை திருவே !!

(இக்கோயில் ஸ்ரீ வில்லிபுத்தூரிலிருந்து 3 கல் தொலைவில் உள்ளது.)

இராவணன் அரண்மனையை விட்டு அனுமனை அரக்கர்கள் வெளியே இழுத்து வந்தார்கள். பொறுமை யில்லாத அவ்வரக்கர்கள் அனுமன் வாலில் அளவில்லாத துணிகளைச் சுற்றினர்கள். நீண்ட அவ்வாலை நெய் யிலும் எண்ணெயிலும் தோய்த்தெடுத் தார்கள். வாலை நெருப்பால் பற்ற வைத்துப்பெரிதும் ஆர்ப்பரித்தார்கள். இரண்டு இலட்சம் அரக்க வீரர்கள் கயிற்றை இரண்டு பக்கங்களிலும் நின்று கொண்டு பிடித்துக் கொண் டார்கள். அனுமன் தப்பிவிடாமல் இருக்கக் கையில் ஆயுதங்களை ஏந்திய வீரர்கள் கோடிக்கணக்கானேர் அனு மனைச் சூழ்ந்து கொண்டு சென்றனர். அனுமனை வேடிக்கை பார்ப்பவர் களது எண்ணிக்கை அளவிலடங்காது. அனுமனுக்கு நேர்ந்த செய்தியைப் பறையறைந்து அரக்கர்கள் அறிவித் தார்கள். வேடிக்கை பார்க்க அனை வரையும் வருமாறு அழைத்தனர்.

அனுமன் கட்டுண்டு செல்வதைக் கண்ட அரக்கர்கள் பெரிதும் ஆர்ப்பரித் தனர். பேரிகை முதலான வாத்தி யங்கள் பலவற்றையும் கொண்டுவந்து ஒலி யெழுப்பினர்கள். இடி முழக்கம் போலப் பெரிதும் கர்சித்தார்கள். அனுமனை அதட்டினர்கள். சிலர் ஓடிப்போய் இச்செய்தியைப் பிராட்டி யார்க்கு அறிவித்தனர்.

இதைக்கேட்ட பிராட்டியார் உயிர் துடித்தாள்; உடல் வியர்த்தாள்; தவித்துப்போனுள் ; விம்மலுற்றுள்; கீழே விழுந்தாள்; அழுதாள் மனம் கொதித்துப் பெருமூச்சு விட்டாள். அன்னைக்கு உயிர்தந்த அப்பனல்லவா அனுமன் !

''அக்கினி பகவானே ! அனுமன் எல்லாவுயிர்களிடமும் அருளைச் சொரி பவன். இரக்கமற்ற அரக்கர்கள் அவனுக்குத் தீமை செய்தால், அவ னுக்கு நீ அருள் காட்டுவாயா ? இவ் வுலகுக்கு ஒப்பற்ற காட்சியாக உள் ளவன் நீயேயன்றே? நான் கற்புடை யவள் என்பது உண்மையானுல், நீ

அந்த அனுமனைச் சுடாதே! உன்னை நான் கையெடுத்துக் கும்பிடுகிறேன்!'' என்று சீதை அக்கினி பகவானுக்கு அன்புகலந்த ஆணையிட்டாள்.

பிராட்டி இவ்வாறு கூறிய அளவில், அக்கினி பகவான் பெரிதும் அச்சங் கொண்டான். தன் வெம்மையைத் தணித்துக் கொண்டான். எனவே, நெருப்புப் பற்றியெரிந்தாலும் அனுமனுக்கு அது வெம்மையாகத் தோன்றவில்லை. அனுமனது எலும்புவரை சில்லென்று துண்மையுண்டாயிற்று. அனுமன் வாலில் வைத்த தீ மட்டுமா வெம்மை குறைந்து துண்மையானது! எல்லாவுலகங்களிலும் இருந்த பல்வகை நெருப்புக்களும் குளிர்ச்சியடைந்தன.

தன் உடல் முழுதையும் சுற்றியிருக்கும் தீ தன்னைச் சுடாமலும் எரிக்காமலும் இருப்பது சீதாபிராட்டியின் அருளே என்பதைத் தன் மனத்துள் யூகித்துணர்ந்து அனுமன் பெருங்களிப்பெய்தினன்.

இலங்கைமாநகரின் எல்லாப் பாகங்களையும் ஒன்றுவிடாமல் மூடர்களான அரக்கர்கள் அனுமனுக்குக் காட்டினர். இலங்கைமாநகரம் முழுவதையும் நன்றாகப் பார்த்துக் கொண்டேவந்த அனுமன் இலங்கையின் எல்லைப்புறத்தே வந்து சேர்ந்தான். அரக்கர்களின் கட்டிலிருந்து தப்புவதற்குத் தக்க சமயம் அதுவேயென எண்ணிய அனுமன், இருபுறத்துக் கயிற்றையும் விலாவில் இடுக்கிக் கொண்டு திடீரென உயரே எழும்பினன். கயிற்றைப் பிடித்துச் சென்ற இரண்டு இலட்சம் வீரர்களும் வான்வரை சென்று, பின்னர் தங்கள் தோளற்றுக் கீழே விழுந்தனர்.

தீயால் எரிந்துகொண்டிருக்கும் தன் வாலை 'ராம்! ராம்!' என்று கூறிக் கொண்டே நகரின்மேல் செல்லுமாறு அனுமன் செலுத்தலானன். சிரிப்பால் முப்புரத்தையும் எரித்த சிவனது அம்சமல்லவா அனுமன்! எனவே

எரிக்கும் தொழில் இவனுக்குப் பிறவியிலேயே அமைந்த ஒன்றுதானே! யுகமுடிவில் உலகங்களை யெல்லாம் தன் நெற்றிக் கண்ணாலே அழிப்பவனாகிய சிவபெருமான், யுகமுடிவுக்கு முன்பே அதற்குப் பயிற்சி பெறுபவன் போல, சிவபிரானது அம்சமாகிய அனுமான் தீயுடன் கூடிய தன் வாலை இலங்கையின் பல பாகங்களிலும் செலுத்தினான்.

பொன்னையும் மணியையும் கொண்டு தேவதச்சனான விசுவகர்மாவால் செய்யப் பெற்ற இலங்கைமாநகரின் வீடுகள்தோறும் அனுமன் தாவிக் கொண்டே சென்றான். எனவே, இலங்கைமாநகரின் வீடுகள் முழுதும் தீப்பற்றி யெரிந்தன. இதனால் அந் நகரத்து மக்கள் அனைவரும் கூக்குரலிட்டுக் கொண்டு நாற்புறமும் ஓடலானார்கள்.

எங்கும் தீப்பற்றி எரிதலால் எழுந்த புகையானது வான் முழுவதையும் மறைத்துக் கொண்டது. அரக்கரது தலைமயிரும், அரக்கியரது செம்பட்டை மயிரும் தீப்பற்றி எரியலாயின. தீப் பற்றி எரிந்த யானைகளின் தோல் நீங்கப் பெற்றமையால், அவற்றின் வெள்ளெலும்புகள் மட்டுமே தெரியலாயின. தீயின் வெம்மைக்கு அஞ்சிய எருமை மாடுகளும் அரக்கியரும் கடலில் சென்று வீழ்ந்தனர். இலங்கை மாநகரின் மாளிகைகளிலுள்ள பொன் உருகிப் பொன் கம்பிகளாக மாறின. கொடிகள் கட்டப்பட்ட தேர்கள் அனைத்தும் தீப்பற்றி எரியலாயின. சோலைகளும் தீயினால் கரிந்தன. கட்டி வைத்த கயிறுகளுடன் குதிரைகளும் அழிந்துபோயின. ஆயுத சாலைகளில் தீப்பற்றிக் கொண்டதால், ஆயுதங்கள் அனைத்தும் உருகி எஃகு உருண்டைகளாயின.

நீரை வற்றுமாறு செய்து, பெரிய பூமியையும் தகித்து, மரங்களை எரித்து, மலைகளையும் வேகச் செய்து, மேரு மலையையும் பற்றி எரிக்கின்ற கற்பாந்த காலாக்கினிபோல, உயரத் தாவி எரிகின்ற நெருப்பானது இராவணனின் மாளிகையுள்ளும் புகுந்தது. மாளிகையின் உள்ளிருந்த பலவகை மகளிரும் செய்வதறியாது கண்டபடி சிதறியோடினார்கள்.

இராவணனுடைய மலைபோன்ற எழுநிலை மாடமானது தீப்பற்றியெரிந்து ஓரே உருண்டையாகி விட்டது. அப்போது இராவணனும் அவனது உரிமை மகளிரும் புட்பக விமானத்தில் ஏறி வான் வழியே தப்பிச் சென்றனர். மற்ற அரக்கர் கூட்டங்களும் வானத்தில் சென்று தப்பிப் பிழைத்தனர். பின்னர் இலங்கைமாநகர் வெந்து சாம்பலாகியது.

வானிலிருந்த இராவணன் தன்னுடன் தப்பி வந்த அரக்கர்களை நோக்கி, "இலங்கை நகரம் எரியக் காரணமென்ன?'' என்று கோபத்துடன் வினவினான். குரங்கின் வாலுக்கு இட்ட தீயே இலங்கை நகரைச் சுட்டெரிக்கின்றது என்பதை அரக்கர்கள் கூறினர். அது கேட்ட இராவணனுக்குச் சினமும் சிரிப்பும் வந்தது.

"குரங்கு ஒன்றால் இலங்கைமா நகரம் வெந்து சாம்பலாகிறதா? இதனைக் கண்டால் தேவர்கள் எள்ளி நகையாடுவர். நமது போர் வலிமை நன்று!'' எனக்கூறிப் பேரிடிபோற் சிரித்தான்.

அக்கினி தேவனையும், அனுமனையும் பிடித்து வருமாறு அரக்கர்களுக்குக் கட்டளையிட்டான். இது கேட்ட தலைமை வீரர்கள் ஏழுபேர் தம் படைகளுடன் சென்று அனுமனைச் சூழ்ந்து கொண்டனர். அவ்வளவில், அனுமன் எரிகின்ற தன் வாலால் அவ்வரக்கர்களைச் சுற்றிப் பிணித்து மரம் ஒன்றால் அவர்கள் அனைவரையும் அடித்துக் கொன்றான்.

வானத்தில் சஞ்சரிக்கின்றவர்களாகிய வித்தியாதரர்கள் அசோக வனம் மட்டும் பற்றி எரியாமலிருக்கும் நிலையைப் பற்றிப் பேசிச் சென்றனர். அது கேட்ட அனுமன் பெரிதும் மகிழ்ந்து அசோகவனத்தை அடைந்து பிராட்டியின் திருவடிகளை வணங்கினான். "அனுமனுக்கு என்ன நேர்ந்ததோ'' என்று குழம்பிப் போயிருந்த சீதை அனுமனைக் கண்டதும் உள்ளங் குளிர்ந்தாள். உடனே, அனுமன் பிராட்டியை வணங்கி விடை பெற்றுச் சென்றான்.

தீப்பற்றி எரிகின்ற தன் வாலை அனுமன் கடலிலே தோய்த்துத் தீயை அவித்தான். இலங்கையில் பற்றிய தீ இலங்கையை எரித்துவிட்டுத் தானே அடங்கியது.

(தொடரும்)

## ஆர்ஜித தெப்போற்சவம்

திருமலையில் வருடத்தில் மூன்று நாட்கள் நடத்தப்பட்டு வரும் தெப்போற்சவம், இப்பொழுது யாத்திரிகர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வகையில், ஒவ்வொருவாரமும், செவ்வாய்க் கிழமைகளில் நடத்தப்பட்டு வருகின்றது. அன்று இறைவன் திருப்பள்ளி ஓடையில் (தெப்பத்தில்) எழுந்தருளி பக்தர்களுக்கு அருள் புரிவார். ரூ. 1500/- செலுத்தி பக்தர்களும் இவ்வார்ஜித தெப்போற்சவத்தில் பங்கேற்கலாம். பங்கேற்கும் கிருஹஸ்தர்க்கு, ஸ்ரீ வேங்கடேஸ்வரரின் திருவுருவம் பதித்த 5 கிராம் எடையுள்ள தங்கப்பதக்கம் ஒன்றும், வஸ்த்ர பஹுமானமும் மேலும் நைவேத்தியமும் வழங்கப்படும். அதுமட்டுமன்றி, கிருஹஸ்தரைச் சார்ந்த 10 நபர்கள், இறைவனின் தரிசனத்திற்காக அனுமதிக்கப்படுவர்.

# உபநிஷதம்

★ ★ ★

திரு: தி. சா. ராஜா.

'இவள் என்று பிறந்தவள் என்றுணராத இயல்பினள்', என்று இந்திய நாட்டின் தொன்மை குறித்து வரைகிறார் மகாகவி பாரதி. நமது வேதங்களைக் குறித்தும் அவ்வாறு கூறுவது பொருத்தமாக இருக்கும். இந்த வேதங்களுக்குப் பல சாகைகள்-கிளைகள். பெரும்பாலான பகுதி காலத்தால் அழிந்தே போயின. மிஞ்சியிருக்கும் இந்த அறிவுக் கருவூலங்களே நமக்குப் பிரமிப்பை ஊட்டுகின்றன.

வேதங்களுக்கு இரு பகுதிகள். கர்ம காண்டம் – ஞான காண்டம் என்று அவற்றைப் பகுப்பார்கள். கர்ம காண்டம் லோகாதய வாழ்வில் பசுக்களையும், நீர்வளத்தையும், தானியங்களையும் வேண்டி எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளைத் துதிக்கும் பகுதி. ஞான காண்டத்தில் துதிக்கு இடமில்லை. அங்கு எல்லாம் ஆத்ம சிந்தனை.

இந்த உடல், அதனுள்ளிருக்கும் உயிர், அந்த உயிரின் கருப்பொருளான அகவுயிர் ஆகிய தத்துவங்களைப் பற்றி உரைப்பவை உபநிடதங்கள். ஆத்மாவுக்கு அகவுயிர் என்ற சத்து மிக்க சொல்லைக் கொடுத்தவர்களே இறை பக்தியில் ஆழங்கால்கொண்ட விஷ்ணு பக்தர்கள். நான்கு வேதங்களின் சாரத்தையே தமது காப்பியங்களில் நம்மாழ்வார் வெளிக் கொணர்ந்து காட்டியிருக்கிறார் அல்லவா?

இந்த உபநிஷதங்கள் குறித்து நெடுங்காலம் வரை இந்தியர்களுக்குத் தெரியாமலே இருந்தது. அதன் பெருமையை நாம் அறிந்து கொண்ட முறையே சற்று விசித்திரமானது.

தாஜ்மகாலை நிறுவி உலகப் புகழ் பெற்ற ஷாஜஹானுக்கு தாராஷுகோ என்றொரு மகன் இருந்தான். இவன் ஔரங்கஜீபுக்கு மூத்தவன். இறை ஞானம் உடைய காரணத்தினால் பொதுவாய சமய நூல்களைத் தவிர இந்து மதக் கிரந்தங்களிலும் தன் கவனத்தைச்செலுத்தினான். அதன்பொருட்டு சம்ஸ்கிருதமும் பயின்றான். அப்போது ஒரு சில உபநிஷதங்களையும் அவன் படிக்க நேர்ந்தது. அதில் உரைக்கப்பட்டிருந்த பேருண்மைகள் அவனைப் பெரிதும் கவர்ந்தன. ஆகவே தக்க புலவர்களைக் கொண்டு இவற்றில் சிலவற்றைப் பாரசீக மொழியில் பெயர்க்க ஏற்பாடு செய்தான். பாரசீக மொழியில் அனுவாதம் பெற்ற இந்த அருங்கருத்துக்களின் பெருமையை மேலை நாட்டுப் பண்டிதர்களும் கண்டு கொண்டார்கள். ஆகவே இவை லத்தீன் மொழியிலும், பின்பு ஜெர்மன் பாஷையிலும் மொழி பெயர்க்கப்பட்டன. இந்த ஜெர்மன் மக்களின் பாராட்டுதலைப் பெற்று ஆங்கிலத்திலும் அனுவாதம் பெற்றதும் இந்தியர்களாகிய நாமும் இந்த மகா கிரந்தத்தின் பெருமையை உணர்ந்து கொண்டோம். ('வேறு வேறு பாஷைகள் கற்பாய் நீ, வீட்டு வார்த்தை கற்கிலாய்–போ, போ, போ!'—பாரதி).

இந்த உபநிஷதங்களின் தோற்றுவாய் எது? சாதாரண அறிவுள்ளவனுக்கும் விளங்கும்படியாக இவை ஏன் அமையவில்லை? இது நியாயமான கேள்வி.

சின்னஞ்சிறு பிராயத்திலேயே குருவை அண்டிப் பல்வகை வேத நூல்களை முறைப்படி பயின்று பல பெரும் தத்துவங்களைக் குறித்துத் தனக்குள்ளே ஆராய்ந்து அதற்கு முடிவு காண இயலாமல் மீண்டும் ஆசார்யனை அணுகி அவரிடம் ஐயம் கேட்டுப் பெறும் விடைகள்தாம் இந்த




# எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. கே. ராகவாச்சாரி,
நியூஸ் ஏஜெண்ட்,
ரமணி ஸ்டோர்ஸ்,
கும்பகோணம்.

திரு. வி. வி. ரங்கசுவாமி,
ஸ்ரீ வேங்கடேசாயா ரங்கநாதம் சிட்பண்ட்ஸ்,
6-14-140, கோட்டூர் (சாலை)
பாளையங்கோட்டை - R.M.S.
திருநெல்வேலி-2.

திரு. கே. ரங்கசாமி நாயக்கர்,
குமாரபுரம்,
நல்லை (அஞ்சல்)
கோவில்பட்டி R. S.
சாத்தூர் (வழி)
இராமநாதபுரம் மாவட்டம்.

திரு. பி. கே. சுந்தரராஜன்,
21, முராரிவரதய்யர் தெருவு,
சேலம் டவுன்.

திரு. எஸ். ராமகிருஷ்ணய்யா,
ஸ்ரீ மாருதி காபி வர்க்ஸ்,
ஸ்டேஷன் ரோடு,
ஹோஸ்பெட் (அஞ்சல்) R. S.
கர்நாடக மாநிலம்.

திரு. சி. எஸ். குண்டுராவ்,
845, பி. பி. கார்டன்,
கே.ஆர். மொஹல்லா (அஞ்சல்)
மைசூர்-4.

திரு. எஸ். ஸ்ரீகாந்த ஐயர்,
7/114, செல்லாண்டி அம்மன் கோயில் வீதி.
19—வது பிளாக்
மேட்டூர் அணை ஆர். எஸ்.

திரு. ஆர். சம்பத் குமார்,
35, வனப்பட்டரை வீதி,
தெப்பக்குளம்.
திருச்சி-2

திரு. கே. பி. ஆர். சுவாமி,
106, மஹீம் மேன்சன்,
ஸ்டேஷன் ரோடு,
மஹீம், பம்பாய்-16.

பாஸ்கர் நியூஸ் ஏஜென்சி,
டெய்லி மார்கட்,
ஜெய்பூர் (அஞ்சல்)
கோராபுட் மாவட்டம்.

தினமணி ஸ்டோர்ஸ்,
8/1, பழைய போஸ்ட் ஆபிஸ் வீதி
கோயம்புத்தூர்-18

திரு. ஏ. சி. நரசிம்மன்,
9, அமுத நிலயம்,
ஜக் அக்ரஹாரம்.
ஆற்காடு (வ. ஆ. மாவட்டம்)

டாக்டர். பி. கே. கேசவன்.
செவன் ஹில்ஸ்,
2, எம்.எம்.எம். ரெட்டி வீதி
ஜோலார்ப்பேட்டை.

திரு. திட்டகவி. சுப்ரமண்யம்,
15, 6-வது வீதி,
சுப்ரமண்யபுரம், காரைக்குடி.

திரு. ஏ. அருணசலம்,
22/13. வாளிபாளையம்.
1-வது வீதி, திருப்பூர்.

திரு. எஸ். என். கிருஷ்ணசர்மா
10-354 சின்னக்கடை பஜார்,
பரமக்குடி (அஞ்சல்)
இராமநாதபுரம் மாவட்டம்.

இலட்சுமி புக் ஸ்டால்,
5-2-64, பாலாஜி வாடா,
பெத்தபல்லி (அஞ்சல்)
கரீம்நகர் மாவட்டம். (ஆ.பி.)

திரு. கே. எஸ். கோதண்ட ராமய்யா, M.A., B.O.L.,.B.T.,
ஓசூர். தர்மபுரி மாவட்டம.

திரு. எச். ராமாராவ்,
3-4-207, பாக் லிங்கம் பல்லி,
காச்சிகூடா (அஞ்சல்)
ஹைதராபாத் (ஆ.பி.)

திரு. பி. விஜயேந்திரா,
நியூஸ் ஏகஜண்ட்,
நகரி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. எம். பாண்டுரங்கம்,
பாண்டு ஜெனரல் ஸ்டோர்ஸ்,
நேரு பஜார்.
மதனபள்ளி (அஞ்சல்)
சித்தூர் மாவட்டம் (ஆ.பி.)

திரு. ஏ. கே. சுப்ரமண்யம்,
நியூஸ் ஏஜெண்ட்,
பாகாலா (அஞ்சல்)

திரு. ஜி. ஸ்ரீநிவாச ஐயங்கார்,
965, வெங்கோப ராவ் லேன்,
ஸ்ரீ வேங்கடேஸ்வர பெருமாள் [வீதி,
தஞ்சாவூர்.

திரு. ஏ. ரங்காச்சார்யா,
12-5-5. எஸ்.வி.என். வீதி,
பாபைய்யா பேட்டை,
சேமன்,
வரங்கல் (அஞ்சல்) ஆ பி.

திரு. எச், என். இலட்சுமி நரசிம்மைய்யா,
A 106, பெல் காலனி
ஜலஹல்லி (அஞ்சல்)
பெங்களூர்-13.

திரு. எம். பாலசுப்ரமண்யம்
நாகுல் கட்டா வீதி,
தாடிபத்திரி,
அனந்தபூர் மாவட்டம்.

திரு. எஸ். மெங்கதால்,
3, ரங்கநாதபுரம் தெரு,
அவணுசி.

## எங்களுடைய "ஸப்தகிரி" விற்பனைப் பிரதிநிதிகள்

திரு. ஏ. முனுசாமி கௌடா,
ஓல்டு போஸ்ட் ஆபீஸ் ரோடு,
முலபாகல்,
கோலார் மாவட்டம்.

திரு. டி. சீனுவாஸசார்யா,
4, சௌந்தரம்மாள் கோயில் வீதி,
லட்சுமிபுரம்,
குரோம் பேட்டை, சென்னை-44.

திரு. வி. திருவேங்கடம்,
73, காளிமுத்து பிள்ளை லேன,
திண்டுக்கல்.

திரு. எஸ். நாகராஜகுப்தா,
நியூஸ் ஏஜண்ட் & ஜெனரல் மர்ச்சண்ட்,
கிழக்கு பஸ் நிலையம்,
சித்ரதுர்க்கா.

திரு. ஏ. என். கிருஷ்ணமூர்த்தி,
157, கார்டன் ஏரியா,
ஷிமோகா.

திரு. பி. ராம்மோஹன மூர்த்தி,
28-88 ராமேஸ்வரம் அக்ரஹாரம்,
புரதொட்டூர்,
கடப்பை ஜில்லா.

திரு. என். பி. கே. பாய்,
9-901, சங்கர்ஷன் ஏஜன்ஸி,
ஆஜிபாய் ரோடு,
கொச்சின்-2.

திரு. வி. ஜே. ஜனார்தனன்,
11, புஜங்கராவ் வீதி,
சாலவன் பேட், வேலூர்.

திரு. ஆர். வெங்கடேசன்,
68, தெற்கு மாடவீதி,
திருவொற்றியூர், சென்னை-19.

திரு என். வாசுதேவ பிரபு,
10-58, அமராவதி,
கொச்சின்-1.

திரு. என். வி. சாரி,
13. வடக்கு ஈஸ்வரன் கோயில் [தெரு,
ஈரோடு-1.

ஸ்ரீமதி. ஜி. ராஜேஸ்வரி,
32, பிராமணர் வீதி,
நாடுபேட், குடியாத்தம்.

திரு. ஏ. ஸ்ரீநிவாஸசார்யா,
ராயபர்த்தி அஞ்சல்,
வரங்கல் மாவட்டம், ஆ. பி.

திரு. இ. எஸ். வி. ஜகன்னாத ராவ்,
டெலிபோன் ஆபரேட்டர்,
எஸ். இ. இரயில்வே, பிலாய்-3.

திரு. கே. வி. சுப்ரமண்யம்,
குவார்ட்டர் நெ. 1-B.
ஸ்டீரிட் நெ. 5. செக்டர் 10,
பிலாய்-1.

திரு. வை. முகந்தராவ்,
பிளாக் நெ. 10-391,
மங்களவார் பேட், பூனா-1.

விஜயா ஏஜன்ஸீஸ்,
633, ஜே. பஜார்,
கரூர், திருச்சி மாவட்டம்.

மேற்குறிப்பிட்ட இடங்களல்லாது, மற்றைய நகரங்களுக்கு 'ஸப்தகிரி' ஏஜெண்ட்டுகள் தேவை. விற்பனையில் 25% கமிஷன் வழங்கப்படும். மேலும், ஏஜெண்ட்டுகள் இல்லாத இடத்திலிருந்து வரும் குறைந்தபட்சம் 5 பிரதிகள் அல்லது அதற்கு மேற்பட்ட பத்திரிகை சரக்காணைகளுக்கும் (Bulk orders) மேற்படி கமிஷன் தரப்படும.

உபநிஷத்துக்கள். அறிவொளி மிக்க அந்தச் சிந்தனையாளர்கள் மிகுந்த மன உயரத்திலிருந்து உதிர்த்த மணி வாசகங்கள் இவை. ஆகவே அத்தகைய சீடனின் அடிப்படை அறிவும், சீலமும், தவமும் புலனடக்கமும் அமையப் பெற்றால்தான் அந்தப் பெரு வாக்குக்களின் பொருளை முற்றும் உணருதல் சாத்தியம். 'காணவல்லார்க்குக் கண்ணின் ஒளி ஒக்கும்', என்பது மந்திரம். விளக்குவதற்கு மிகவும் கடினமாக பொருள் இறை ஞானம். அந்தத் தத்துவத்தை இது இல்லை, இது இல்லை (நேதி - நேதி) என்று மட்டுமே கூறமுடியும்,

காண்பது கண் அல்ல-எதைக்கொண்டு
கண் காண்கிறதோ அது பிரும்மம்.
கேட்பது செவி அல்ல-எதைக் கொண்டு
செவி கேட்கிறதோ அது பிரும்மம்

இது கேனோபநிஷதம். கொஞ்சம் புரிகிறதல்லவா?

'நாயமாத்மாப்ரவசனேன லப்யோ', என்று தொடங்குகிறது கதோபநிஷதத்தின் இருபத்தி மூன்றாம் சுலோகம். அற நூல்களை ஓதுவதனாலேயோ, படிப்பினால் பெற்ற அறிவினாலேயோ அக உயிரைக்காண இயலாது. இது இன்றைய லோகாதய வாதிகளுக்காகவே கூறப்பட்டிருப்பதைப் போல் உள்ளதல்லவா ?

ஆத்ம ஞானம் வேண்டும் என்று தீராத காதல் கொண்டு விருப்பம் ஓங்கப் பெற்றவனுக்கு மட்டுமே அகவுயிர்க் காட்சி தென்படும். இது அடுத்தவரி. இந்தத் தீராத காதல் நெஞ்சில் எப்போது எழும்? இதற்கான முறைகள் யாவை ? அவற்றை எவ்வாறு கடைப்பிடிப்பது என்பதைப் போதிப்பவைதான் இந்த ஞானச் சுடர்களான உபநிஷதம்.

நூற்றுக்கும் மேற்பட்ட உபநிஷதங்கள் மட்டுமே இன்று புழக்கத்தில் உள்ளன. மற்றவை காலத்தால் அழிந்து போயின. எந்தெந்த உபநிஷதம் எந்த மறையின் ஞான காண்டம் என்று வகைப்படுத்தியிருக்கிறார்கள்.

இவைகளில் ஒரு சிலவற்றிற்கு எம்பெருமானாரும், சங்கரரும், மத்வாசாரியாரும் உரை கண்டிருக்கின்றனர். அவை சிறப்பு மிக்கவை. காலத்தாலும், கண்ணோட்டத்தாலும் வேறுபட்ட இந்தச் சிந்தனையாளர்கள் தாம் நின்ற நெறிப்படி இந்தப் பெருநூல்

# தி
# ரு
# வி
# ள
# க்
# கு



திரு. கே. எம். ஜெயராமகிருஷ்ணன்
குமாரலிங்கம்.

உலகின் சர்வ இயக்கங்களுக்கும் மூலாதாரமாக விளங்கும் காரண கர்த்தாவான சூரியனை ஆதிமனிதன் தன் அறிவு தொடக்கம் பெறும்முன்பே இறைவனாக எண்ணி வழிபட்டான். கடுமையான மழையினூடே கண்ட மின்னொளியைக் கண்டு அஞ்சிய அவன் அதனையும் தெய்வமாக எண்ணி வழி பட்டதை வரலாறு செப்பும். பின்னர் மனிதன் தன் அறிவின் ஆரம்ப கால வளர்ச்சி நிலையில் அனலைக் கண்டு பிடித்து-அது அமைத்த அஸ்திவாரத்தின் மீது தனது நாகரீகக் கோட்டையை எழுப்பியதை யாரும் மறுக்க இயலாது.

இவ்வாறு ஒளியே வாழ்வின் மிக உன்னத அம்சமாகத் திகழ்ந்தது. காரிருள் அகல காடுறைந்து வாழ்ந்த மக்கள் உஷத் மந்திரத்தை ஜபிப்பதை—ஆரிய வேதம் விவரித்துக் கூறுகிறது. எங்கும் நிறைந்து யாவுமான பரம்பொருளை 'ஆத்மஜோதி' என்று நம் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

**'அக்னி முகாவை தேவாஹ',**

என்கிறது வேதம்.

**''செங்கதிர் தேவன் ஒளியினைத்
தேர்கின்றோம்-அவன்
எங்கள் அறிவினைத் தூண்டி
நடத்துக''—**

என்பதே காயத்ரீ மந்திரத்தின் தமிழ் பொருள் ஆகும் என்பார் மகாகவி சுப்ரமணிய பாரதி அவர்கள்.

மேலும் குளிர் போக்க நெருப்பு மூட்டி குளிர் காய்வதை மார்கழி மாதங்களில் காலை வேளைகளில் இன்றும் பல கிராமங்களில் காணலாம். இவ்வாறு, இருளகற்றுவதோடு அல்லாமல் ஒளி உடலுக்கும் உள்ளத்திற்கும் ஒருவகை புத்தொளியை வழங்கியதனால்தான் ஆன்றோர் இறைவனையும் பேரொளியாக வணங்கி வழிபட்டனர். அவன்பால் விளங்கும் அப்பேரொளியை தனிக்கருணைவடிவமாகவே ஆன்றோர் கண்டனர்.

நமக்கெல்லாம் 150 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்து ஜோதியுடன் கலந்த அருட்பெருஞ்ஜோதி இராமலிங்க வள்ளலார் இறைவனை திருவிளக்கில் அல்லவோ கண்டனர்.

அவ்வாறே தான் கண்ட இறைவனும் முருகப்பெருமானை குறிப்பிடும் போது அருணகிரிநாதர் 'தீப மங்கள ஜோதி' என்பார். இவ்வாறு ஒளியின் பால் கலந்து ஆதியும் அந்தமும் இல்லா பெருஞ்ஜோதியாக விளங்கும் அப்பெருமானை லட்சுமியின் அம்சமாக எண்ணியே ஆன்றோர் - கார்த்திகைத் திருநாளும்-தீபாவளித் திருநாளும் கொண்டாடினர். எனவே நாமும் அவர்கள் சென்ற வழியில் சென்று வீடு விளக்கமுற விளக்கேற்றி வைத்து-அதனால் தோன்றும் தீப ஒளியாம் 'திருமகளை' அமரச் செய்து வணங்கி வழிபட்டு திருமகளை - திருவிளக்கைப் போற்றி, நம் மன இருள் அகன்றிட கலியுக வரதனும் ஏழுமலையானின் திருத்தாள் பணிவோமாக! ★

களுக்கு விளக்கம் கண்டிருக்கிறார்கள். எந்தக் கோணத்தில் நின்று பார்த்தாலும் காட்சியின் இறுதி எல்லை ஒன்றுதான். அங்கே விளங்கும் பேரொளியில் கலந்து போனாலும் (அத்துவைதம்) பிரபத்தி அடைந்தாலும் (விசிஷ்டாத்துவைதம்) விலகி நின்று பூசித்தாலும் (துவைதம்) பலன் ஒன்றே தான். உணரவேண்டும் என்ற துடிப்புத்தான் முக்கியம். அதனால்தான் எல்லா முறைகளையும் மறந்து துறந்து விட்டு என்னடிகளைச் சரண்புகு என்று பின்னாளில் பரமாசார்யன் வியாசர் மூலம் அருளினானோ? (ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ |)

ஓரிரு சுவிசேஷங்களையாவது அறியாத கிறிஸ்துவர் இருக்கமாட்டார். கல்மா ஓதத் தெரியாத முஸ்லீமும் கிடையாது. ஆனால் பிரஸ்தானத் திரயம் என்று போற்றப்படும் கீதை, பிரும்ம சூத்திரம், உபநிடதம் ஆகியவைப்பற்றி கேள்விப்பட்டிராத ஹிந்து சமயத்தினர் எண்ணிலர். இந்த நிலை ஓரளவாவது மாறினால்தான் சமுதாயத்திற்கு நல்லது.

மீண்டும் மகாகவியை நினைவு கொள்ளுவோம்!

**பன்னரும் உபநிட நூலெங்கள்
நூலே,
பார்மிசை ஏதொரு நூலிது போலே?**



# வினைப் பயன்

திரு. அ. சேஷாத்ரி, சென்னை.

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்
உண்மை அறிவே மிகும். [தன்
திருக்குறள் ஊழ் (3)

வினைப்பயன் அல்லது விதியை நாம் எப்படியும் வெல்ல முடியாது. தர்மபுத்திரர், இராமர், சீதாதேவி இவர்கள் எவ்வாறு விதியைத் தவிர்க்க இயலாது, அதனால் விளைந்த பயனுக்கு ஆளாகிறார்கள் என ஈண்டு ஆராயத் தக்கது.

யுதிஷ்டிரர் தர்மத்தின் உருவானவர். பொய் சொல்லுவதையும் அறவே துறந்தவர். விளையாட்டுக்கும் பொய் சொல்ல மறுத்தவர். மஹா பாரத யுத்தத்தில் துரோணரைக் கொல்ல ஸ்ரீக்ருஷ்ணன் அஸ்வத்தாமா இறந்துவிட்டான் என்று சொல்லவேண்டுமென ஒரு யுக்தி செய்தும், உண்மையைத் தவிர தான் பொய் சொல்ல மறுத்தவர்க்கு, வேறு உபாயம் செய்ய வேண்டியதாயிற்று. அப்படி தர்மம் தெரிந்தவர், சூதாட்டம் கொடியது அதை விளையாட்டுக்கும் ஆடக்கூடாது என்றெல்லாம் சொன்னவர் இந்த சூதாட்டத்தில் நாடு, தம் தம்பியர், மனைவி த்ரௌபதி எல்லாவற்றையும் இழந்து காடு செல்ல வேண்டியதாயிற்று. இது எதனால்? மேல் சொன்ன திருக்குறளைப் பார்த்தால் இதன் உண்மை விளங்கும். அவருடைய விதி அவரை விளையாடத் தூண்டிவிட்டு எல்லா தர்மத்தையும் அந்த விதி மறக்கடித்து விட்டது. இந்த நிலை ஏற்படாவிட்டால் கிருஷ்ணாவதாரம் பூர்த்தியடையாது. மகா பாரதயுத்தமும் நடந்திருக்காது. எல்லாவித தர்மங்களையும் காத்து, துஷ்டர்களைத் தண்டிப்பது எப்படி!

அடுத்ததாக இராமாயணத்திற்குச் செல்வோம். இராமர் கங்கை நதியைக் கடந்து குகனுடன், சீதா லக்ஷ்மண சமேதராக குகனுடைய குடிசைக்குச் செல்கிறார். அங்கு அவனளித்த உணவு வகைகளில் சத்வ குணத்தை மேம்படுத்த வேண்டியவை மட்டும் சாப்பிடுகிறார். இரவு நேரம் வந்தவுடன் அங்கேயே தரையில் லக்ஷ்மணன் தர்ப்பாசன் விரிக்க இராமரும் சீதையும் அதில் சயனிக்க ஆழ்ந்த நித்திரையில் ஆனந்தமயமாக உறங்குகிறார்கள். தம்பியும் குகனும் ஒருவர் மேல் ஒருவர் சந்தேகிக்க காவல் புரிகிறார்கள். மறுநாள் இங்கிருந்து புறப்பட்டுச் செல்கிறார்கள். இதன் பிறகு பரதன் இராமனை அயோத்திக்கு அழைத்துச்செல்ல வருகிறான். குகன் பரதனிடம் நடந்த விருத்தாந்தங்களைத் தெரிவிக்கிறான். அங்கே இராமர் சீதாதேவி படுத்துறங்கிய தரையையும் காட்டுகிறான். பரதன் அப்பொழுது விதியின் கொடுமையை நினைக்கிறான்.

நநூநம் தைவதம் கிஞ்சித் காலேன
பலவத்தரம்:
யத்ர தாசரதி: ராம: பூமௌ ஏவ
சயீதவ:

இந்த வால்மீகி ஸ்லோகத்தில் பொருளும் இதேதான். விதியை தெய்வமும் வெல்ல முடியாது.

அசோக வனத்தில் சீதாபிராட்டி அரக்கியர்களின் எல்லா கொடுமைகளுக்கும் ஆளாகிறாள். ராவணன் வந்து கடைசியாக இன்னும் இரண்டுமாதம் தவணைதான் கொடுப்பேன், அதற்குள் நீ எனக்கு மனைவியாக வேண்டும் அல்லது இந்த அரக்கியர் உன்னை துண்டம் செய்து என் காலைஉணவுக்கு வைப்பார்களென்று பயமுறுத்திச் செல்கிறான். இனிமேலும் துக்கம் தாளமுடியாத நிலையில் சீதாதேவி தூக்கு போட்டு மரண மெய்வதைத் தவிர வேறு வழியில்லையென முடிவு செய்கிறாள். அப்பொழுதும் அவள் யாரையும் நொந்து கொள்ளவில்லை. தன் வினைப்பயனைத்தான் குறை கூறிக் கொள்கிறாள். தான் முன் செய்த ஊழ்வினைதான் தன்னை இக்கொடுமைக்கு ஆளாக்கியது என்றுதான் வருந்துகிறாள்.

இவையெல்லாம் ஆராயும்போது நமக்கு ஒரு துன்பம் நேருங்கால் வேறு ஒருவரையும் பழிக்காமல் நம் தீவினைப் பயனையே அனுபவிக்கிறோமென இருப்பதே சாலச் சிறந்தது.

கவிதார்க்க ஸிம்ஹாய கல்யாண
குணசாலினே
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த
குரவே நம:



காந்தி நினைவு மண்டபம்—கன்னியாகுமரி.



# அறங்காக்கப் பிறந்த அழகன்

கவிஞர். ப. கோவிந்தராசு, ஈரோடு - 1.

மூலத்து வித்தாகி மும்மைப் பொருளாகி
நீலமேகப் பச்சைவண்ண நின்றதிருக் கோல,ராம!
காலமுடன் எல்லைநீத்தே கையில்வில் ஏந்தியிந்த
ஞாலமதில் நல்லறத்தை நாட்டுதற்கே வந்துதித்தாய்!

நந்தா விளக்கெனவே ஞானக் கொழுந்தாகி
சுந்தரத் தோள்கொண்ட சூர்யகுலத் தோன்றலாய்
செந்தாமரை பூத்த திருமுகத்துச் சீராளா!
வந்தாய்,இவ் வையகமும் வானகமும் வாழ்த்தெடுப்ப.

சீல எழில் பொங்கும் செம்மைத் திருகொஞ்சும்
காலைக் கதிர்தோற்கும் காவியத்துப் பெட்டகமே!
கோல வடிவெல்லாம் கொண்டொளிரும் ஆணழகா!
ஞானமினி(து) உய்ந்திடவே நண்ணி அவதரித்தாய்!

கள்ளந் தவிர்த்துக் கடமைகள் ஆற்றிடவே
உள்ளக் கடல்விடுத்து ஒப்பில் இராமனென
வெள்ளிமலை விட்டும், வியன்பாற் கடல்துறந்தும்
அள்ளும் அறந்தழைக்க ஆண்டகையே நீபிறந்தாய்!

மைவண்ணத் திருமேனி மனங்கவர்ந்த பேரழகு
செய்வண்ணத் திறமுடைய செப்பரிய சீரழகு
உய்வண்ணப் பதம்நல்கும் ஒப்பரிய மனஅழகு
கைவண்ணம், கால்வண்ணம், கருணைமிகும் கண்ணழகு.

அணைக்கின்ற கரம்நீட்டி அருள்செய்யும் முகமழகு,
பிணைக்கின்ற மொழியழகு, பேரின்பச் சுவையழகு,
மணங்கொண்ட சீதையுடன் மனமொன்றும் வடிவழகு
துணைநின்றே பதம்நல்கும் தூயன்புப் பண்பழகு.

அறம்பேணும் நெறியழகு, அஞ்சாத மார்பழகு,
திறமுடைய நிறையழகு, செம்மலவன் செயலழகு,
மறம்வீழ்த்தும் வில்லழகு, மாட்சிதிகழ் சொல்லழகு,
சிறக்கின்ற நலம்யாவும் செழித்தோங்கும் பொலிவழகு.

இனிக்கின்ற உளத்தினிலே இழைந்தோடும் உணர்வழகு
மணக்கின்ற தமிழ்போலும் மலர்கின்ற உரையழகு
பிணிக்கின்ற உறவழகு, பீடுடைய நடையழகு
தனக்குவமை இல்லாச்சீர், தவ,வொழுக்கத் திறனழகு.

பூமணக்கும் தன்மைபோல புகழ்நெறிக்கு வழிகாட்டி
தேமணக்கும் தமிழாலே தெய்வீகப் பேரழகை
பாமணக்கச் செழுங்கவியால் பாவேந்தன் கம்பநாடன்
நாமணக்கப் பாட்டிசைத்தான் நல்ராமன் புகழ்வடிவை.

நீலமேகப் பசுமுகத்தில் நீள்செந்தா மரைக்கண்கள்
சீலத்தா மரைக்கைகள், சிவந்ததா மரைப்பாதம்
கோலஞ்செய் நறுங்குஞ்சி, குண்டலங்கள் தவழ்ந்தாட
ஞாலந்தான் வியந்தேத்தும் நல்லழகை என்னவென்போம்?

மாமணியே! மாதவமே! மன்னுபுகழ்க் கோசலையின்
தூமணியே! துயர்களைந்து தொடர்கின்ற பெருஞ்சுகமே!
நாமணியும் திருநாமம் நறுந்துளசிச் சீர்மையெலாம்
பாமணியாய்க் கோர்ப்போர்க்கு படியளக்கும் பரந்தாமா!

இவையாவும் நிறைந்திட்ட இராமபிரான்
சுவையூறும் செந்தமிழிற் சொல்லவல்ல கம்பனல்லேன்
குவியலென தவகவிதை கூறுதிறன் பாரதியை
உவந்துபற்றும் அடியனிவன் உளத்தெழுந்த பாச்சுவைப்பீர்!

(8ம் பக்கத் தொடர்ச்சி)

களையும் மறைக்காமல் கூறினான். உடனே பெரியவர் இந்தக் கொடிய காரியங்களை கைவிடலாகாதா? என வினவினார். அதற்கு இவன் தன்னால் இயலாது என்று மறுமொழி அளித்தான். உடனே பெரியவரும் தனக்குத் தகுந்த சமயத்தில் உதவி செய்த இவனுக்கு உய்ய உபாயம் உபதேசித்தார். கோவிந்தா என்கிற நாமத்தை சதா சொல்லி வா என்று கூறிச் சென்றார். க்ஷத்ரபந்துவும் அது முதற்கொண்டு கோவிந்த நாம ஸங்கீர்த்தனம் செய்து மேலாம் பரகதியை கண்டு கொண்டதாக புராண வரலாறு உண்டு.

இதையே ஆழ்வாரும்,

'மொய்த்த வல்வினையுள் நின்று
மூன்றெழுத்துடைய பேரால்
கத்திரபந்து அன்றே பராங்கதி கண்டு
கொண்டான்,'

என்று கூறுகிறார். பகவந்நாமாக்களில் ஒன்றாகிய கோவிந்த நாமத்திற்குள்ள மஹிமையை அறிந்த திரௌபதியும் துச்சாதனனால் துகில் உரியப் பட்ட அந்த வேளையில் 'கோவிந்தேதி யதாக்ரந்தத்,' என்கிற கணக்கிலே கோவிந்த நாம ஸங்கீர்த்தனம் செய்து தனது மானத்தை காப்பாற்றிக்கொண்டதாகப் பாரதம் கூறும்.

ஆண்டாளும்-

'' மத்த நன்னறு மலர் முருக்க மலர்
கொண்டு முப்போது முன்னடி
வணங்கித்
தத்துவ மிலியென்று நெஞ்செரிந்து
வாசகத் தழித்துன்னை வைதிடாமே
கொத்தலர் பூங்கணை தொடுத்துக்
கொண்டு
கோவிந்தனென்பதோர் பேரெழுதி
வித்தகன் வேங்கட வாணனென்னும்
விளக்கினிற் புகவென்னை
விதிக்கிற்றியே ''

என்கிறாள். இவ்வாறாக பகவத் பக்தியில் திளைத்த பக்தர்களின் நிலை இருக்க பகவான் நிலை எவ்வாறு உள்ளது?

ஸப்தகிரி

என்று நாம் நோக்க வேண்டும். 'அத்ராவதீர்ய நநுலோசன கோசரோ பூ:' என்று பாபிகள் நிறைந்த இருள்தரு மா ஞாலத்தினுள் அவதரித்து அனைவர் கண்ணுக்கும் இலக்கானாயே என்று கூரத்தாழ்வான் போன்றோர் விசனித்திருக்கச்செய்தேயும் பாகவதாபசாரம் பொறுமல் பகவான் அவதரிப்பதாக பெரியோர் பணிப்பர். பகவானும் பக்தர்களிடம் பரிவு மிக்கவனாக உள்ளான். குசேலரின் மனைவி தனது கணவரிடம் 'ஸாதுக்களுக்கு அடைவிடமான அந்த கிருஷ்ணனை அடைவீராக. குடும்பியும், அதற்குப் போதிய பொருளின்றி தளர்ந்திருப்பவருமான உமக்கு அதிகமான தனத்தை அவர் கொடுக்கப் போகிறார். தனது பாத கமலத்தை ஸ்மரிப்போர்க்கு தனது ஆத்மாவையும் கொடுத்து விடக் கூடியவரல்லவா கிருஷ்ண பரமாத்மா' என்றெல்லாம் கூறினாள். உடனே குசேலரும் 'ரிக்த ஹஸ்தேன நோபேயாத் ராஜானம் தைவதம் குரும்' என்கிறபடி அரசர்க்கு அரசனாகவும் தெய்வமாகவும் விளங்கும் கிருஷ்ணனைக்காண வெறுங்கையுடன் போகலாகாது என எண்ணியவராய், தனது மனைவியிடம், வீட்டில் காணிக்கைப் பொருள் ஏதாகிலும் உண்டா? இருந்தால் கொடு- என்றார். உடனே அவர் தர்மபத்நி நான்கு பிடி அவலரிசியை ப்ராம்ஹணர்களிடமிருந்து யாசித்துப் பெற்று அதைக் கிழிந்த துணியில் கட்டி தனது கணவரிடம் கொடுத்தாள். ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்து அன்பு கூறும் அடியவரான குசேலரும் கிருஷ்ணனைக் கண்ணாரக்கண்டு தொழுதக்கால் கிருஷ்ணன் கூறினான்:

கிமுபாயன மாநீதம் ப்ரம்ஹன் மே
பவதா க்ருஹாத்।
அண்வப்யுபஹ்ருதம் பக்தை:
ப்ரேம்ணா பூர்யேவ மே பவேத்॥

என்று. 'ப்ராம்ஹணோத்தமரே! உம்மால் வீட்டிலிருந்து என்ன காணிக்கைப் பொருள் கொண்டு வரப்பட்டது? பக்தர்களின் ப்ரேமையுடன் கொண்டு வரப்பட்டது அணுவானாலும் கூட அது எனக்கு அதிகமானதாகவே ஆகும்' என்கிறான் கிருஷ்ணன். இங்கு பக்தர்களிடத்து பகவானக்குள்ள பரிவை நாம் நோக்க வேண்டும். 'பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி' என்றன்றோ கீதாசாரியன் மொழிகிறான். இலையானாலும் புஷ்பமானாலும், பழமானாலும் ஜலமானாலும் எவனொருவன் பக்தி பாவனையுடன் எனக்கு அர்ப்பணிக்கிறானோ அதையே நான் ஸ்வீகரிக்கிறேன்-இதன்றோ பகவான் நிலை. இதேபோன்று விதுரன் குடிலில் புசித்த கிருஷ்ணனை நோக்கி துரியோதனன் காரணம் வினவியபோது 'மம ப்ராணாஹி பாண்டவா:'' என்று சொல்லி பாண்டவர்கள் எனக்கு ப்ராணன் அல்லவா என்கிறான் கிருஷ்ணன். இதே அபிப்ராயத்தை அடியொட்டியே ஆழ்வாரும் 'ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாதிரங்கி ......'' என்று அருளிச் செய்கிறார். ஸ்வாமி வேதாந்த தேசிகனும்,

நிஷாதானாம் நேதா கபிகுலபதி:
காபி சபரீ
குசேல: குப்ஜா ஸா வ்ரஜயுவதயோ
மால்ய க்ருதிதி।
அமீஷாம் நிம்னத்வம் வ்ருஷகிரிபதே:
உன்னதி மபி
ப்ரபூனத: ஸ்ரோதோபி: ப்ரஸப
மநுகம்பே ஸமயஸி॥

என்கிற தனது 'தயா சதக' ஸ்லோகத்தில் 'வேங்கடவனின் தயாதேவியே! வேடுவர் தலைவன் குஹனிடமும், சுக்ரீவனிடமும், யாரோ ஒரு ஸபரியிடமும் குசேலரிடமும், குப்ஜை யென்கிற



ஸ்ரீ விவேகானந்தர்
நினைவு மண்டபம்
✶
கன்னியாகுமரி.

கூனியிடமும், கோபிகா ஸ்திரீகளிடமும், மாலாகாரனிடமும் ஒருவர்க்கொருவர் ஏற்றத்தாழ்வு இருந்தபோதிலும் உன்னுடைய கருணைப்ரவாஹத்தால் மேட்டையும் பள்ளத்தையும் சமப்படுத்துகிறாய்' என்று அருளிச் செய்கிறார். இதே போன்று இராவணனால் நோவுபட்ட ஹநுமானைக் கண்ணுற்று கோபமேயடையாத இராமபிரான் இராவணனைக் கண்டு கோபப்பட்டதாக வால்மீகிகூறுகிறார். தனது பக்தர்கள் விஷயத்தில் பகவானுக்குள்ள பரிவு உள்ளங்கை நெல்லிக் கனியென நமக்கு விளங்குகிறது. பகவானுக்கு மேன்மை என்பதானது 'இடுசிவப்பு' (மேலே பூசிய வர்ணம்) அன்றோ! பகவான் ஆச்ரிதர் விஷயத்தில் மோஹம் உடையவன் அல்லவா? 'இராவணனுக்குப் பின்னே பிறந்த என்னைவெங்கதிரோன் குலத்திற்கோர் விளக்காய் தோன்றிய இராமன் ஏற்றுக்கொள்வாரா?' என்பது விபீஷணன் கவலையாக இருந்தால், இராமனுக்கோ ''யதி வா ராவண; ஸ்வயம்'' என்கிற மனநிலை அல்லவா இருந்தது. இராவணனே மனம் மாறி வந்தால் அவனை ஏற்றுக் கொள்கிறேன் என்பதல்லவா இராமன் எண்ணம்.

ஸ்ரீ மஹிஷாசுர மர்த்தினி—கே முரளிதர், அனந்தபூர்.



பக்தர்களுடையவும் பகவானுடையவும் மனநிலையை 'மாலே மணிவண்ணா' என்கிற திருப்பாவை பாசுரத்தில் அழகுற வியாக்யானம் செய்தார்கள் நம் பூர்வர்கள். அதைச் சிறிது கேண்மின்:

கோபிகைகள் 'கிருஷ்ணனைப்பிரிந்து ஒரு மாதம் ஜீவித்திருக்கமாட்டோம்' என்று எண்ணினால், இவனோ ஒருக்ஷணமும் பிரிந்திருக்க முடியாது என்று நினைப்பவனும்: 'வாரிக் கொண்டு விழுங்குவன் காணில்' என்கிற மனநிலை கோபிகைகளுக்கு. 'என்னில் முன்னம் பாரித்து பருகினானிறே' என்பது பகவானுடைய மனநிலை: 'எனைத்தோர் பலநாள் அழைத்தேனிறே' இது கோபிகைகள் மனநிலை. 'எந்தன் கருத்தையுற வீற்றிருந்தானிறே' இது பகவானுடைய மனநிலை: 'அதனில் பெரிய என்னவாவிறே' இது கோபிகைகள் மனநிலை. 'அவாவுறச் சூழ்ந்தாயே' இது கண்ணன் மனநிலை: 'நாராயணன் நமக்கு கிடைப்பானா' இது கோபிகைகள் மனநிலை. 'யது குலத்தில் பிறந்தார்க்கு கிடைக்கப் பெறுமா' இது கண்ணன் மனநிலை. இப்படியாக பகவானுடையவும் பக்தர்களுடையவும் நெருக்கம் உள்ளதாக நம் பூர்வர்கள் அழகுற வ்யாக்யானம் செய்கிறார்கள். ஆகவே நாமும் அந்தப் பகவானுக்கு அந்தரங்க அடிமை பல செய்து, திருமலை ஒருமையானை நினைந்து, ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்து இன்பம் பெறுவோமாக. ★

(தொடர் கட்டுரை)

# சொல்லின் செல்வன் - அறிவு

டாக்டர் பொன். சௌரிராஜன், M.A., Dip. Lit., Ph.D., திருப்பதி.

தன்னையே எண்ணி இறுமாப்பது அகந்தை; அஞ்ஞானம். பிறரையே நினைந்து உதவுவது அருள். அந்த அருளுக்குத் துணையாவதே அறிவின் பயன்.

'அறிவினான் ஆகுவ துண்டோ
பிறிதின் நோய்
தம் நோய்போல் போற்றாக்கடை.'
(குறள். 315)

என்பர் பொய்யாமொழியார்.

உருசிய முக பருவதம் நோக்கி வந்துகொண்டிருக்கும் இராம இலக்குவரைக் காண்கின்றனர் சுக்ரீவனும் அனுமனும். அன்னார் வாலி அனுப்பிய பகைவர் என எண்ணி ஓடி ஒளிகின்றான் சுக்ரீவன். "அனும! இவரைப் பார். வாலி ஏவலால் வருகின்றனர்; வில்லேந்தி உள்ளனர்; நீல மலைபோல் நிமிர்ந்துள்ளனர்" என்று கூறித் திரும்பிப் பாராது ஓடுகின்றான்.

அனுமனோ அமைதியாக அன்னாரை நோக்கி, 'இவரோ நொந்துபோய் உள்ளனர்; எதனையோ இழந்து எண்ணி எண்ணி ஏங்குவதுபோல், தோன்றுகின்றனர். அறத்தின் இருப்பிடம்; அருளின் பிறப்பிடம்; அழகின் வடிவினர்' இப்படிப் பலவாறு கண்டு, 'பிறவிப் பிணியிலிருந்து மானுடத்தைக் கரையேற்றத் தோன்றிய தெய்வங்களோ இவர். என் நெஞ்சும் உருகுகின்றதே; அன்பு பெருகுகின்றதே' என்று நெக்கு உருகுகின்றான் அனுமன்.

"துன்பினைத் துடைத்து மாயத்
தொல்வினை தனனை நீக்கித்
தென்புலத் தன்றி மீளா நெறி
வுய்க்கும் தேவரோ தாம்?
என்பு நெக்குருகு கின்றது; இவர்கின்
றதளவில் காதல்
அன்பினுக் கவதி இல்லை; . . . ."

கண், செவி, மூக்கு முதலிய பொறிகள் காட்டும் புலக் காட்சிகளைக் கடந்து பொருள் ஒவ்வொன்றன் மெய்த் தன்மையைக் கண்டறிவது அறிவின் இயல்பாகும். இராமபிரானைக் காணும் அனுமன் கண்கள் அவருடைய கண்களை நேருக்குநேர் சந்திக்கின்றன. அந்த எழிலார்ந்த, இனிய, கனிந்த, அகன்ற, பெரிய செந்தாமரைக் கண்ணழகிலே ஆழ்ந்து கால்பட்ட அனுமன் அன்பர்க்கு உயிர் வளர்க்கும் அமிழ்தமாய், வன்பர்க்கு வாழ்வொழிக்கும் நஞ்சாய் அது திகழ்வதன் மெய்த்தன்மையை கண்டு கொண்டு பின்வருமாறு இராமபிரானை அழைக்கின்றான்.

" ......மகளிர்க்கு எல்லாம்
நஞ்சனைத் தகைய ஆகி நளிர்
இரும் பனிக்குத் தேம்பாக்
கஞ்சம் ஒத்தலர்ந்த செய்ய
கண்ண..."

'அறிவுடையார் ஆவது அறிவார்'. அறிவிலார் நிகழ்காலத்தைச் சரிவர நிகழ்த்தவே தடுமாறுவர். அறிவு வாய்ந்த சான்றோர்களோ எதிர்காலத்தையும் நிகழ்காலத்தில் நின்றே கண்டு செயலாற்ற வல்லவர் ஆவர்.

இராமன் வருகையின் பயனை அனுமன் சென்று சுக்ரீவனுக்கு உரைக்கின்றான். "சுக்ரீவரே! இராமாவதாரத்தால் யான் உய்ந்தேன்; என் குலம் உய்ந்தது; இந்தக் குவலயம் எல்லாம் விடுதலை பெற்றது. நீயும் உய்ந்தாய். ஏனெனில் வந்தவர் வாலியின் உயிர் எடுக்கும் காலர் ஆவர்" என்று அண்மையில் சுக்ரீவருக்கு நலமாய் அமையப்போகும் வாலி வதையாகிய நல் எதிர் காலத்தையும், அதன்பின் அகிலமெலாம் தொடர்ந்து அடையப்போகும் பெரும் பயனையும் தன் அறிவுக் கண்களால் கண்டு அனுமன் உரைக்கின்றான்.

"யானும், என் குலமும், இவ்
உலகும் உய்ந்தனம்' என்று
மானவன் குணமெலாம் நினைபும்
மா மதியினான்"
(கம். 3787.)

"வாலி என்ற அளவிலா வலியினான்
உயிர்தெறக்
காலன் வந்தனன்; இடர்க்கடல்
கடந்தனம்" (கம். 3788.)

இலங்கை மாநகர் சென்று சிறையிருக்கும் செல்வியைத் தேடலுற்ற அனுமன் அரக்கர் பலரைக் கண்டு உறங்கும் வீடணனையும் காண்கின்றான். அரக்கர் பிறரிடமிருந்து அவனை அனுமன் பிரித்து உணர்கின்றான்.

"உற்று நின்று அவற்றையெலாம் உணர்வுத்
தன்றுணர் விறைவுணர்வுதா
'கற்றார் நல்லது ஓர் தனைநிகரா
நிலா'

என்று தெளிவுறுகின்றான்.

இராவணன் தேவி மண்டோதரி மயன் மகள், தெய்வ மகள் அன்ன மையின் சீதைபோலத் தோன்றுகிறாள். 'அன்னை ஆகிய சானகி இவள்' என அனுமன் ஐயுறுகின்றான்.

கற்பு நிலையறு கலங்குதல் இவளெனின்
காதத்தன் புகழோடும்
பொற்புறு யானும் இவ்விலங்கையும்
அரக்கரும்
பொன்றுதும் இன்று'

என்று சாகத் துணிகின்றான். பின் தன் அறிவால் தெளிந்து 'இவள் சீதை அல்லள். இராமனைக் காதலித்த காரிகை ஒருத்தி வேறொரு ஆடவனை அறியாள் என்று இராமன் அழகில் ஈடுபட்டு, சீதைக்கு உரிய இலக்கணங்களாக இராமபிரான் கூறியன சில இவளிடமும் உள்ளன எனினும் விரைவில் அழியப்போகும் குறிப்புடையது இவள் யாக்கை' என்று துணிகின்றான்.

சுக்ரீவரை வந்தடைந்த இராம இலக்குவர்க்கு வாலியால் சுக்ரீவன் உற்ற துயரெலாம் எடுத்துரைத்தனன். கேட்ட இராமபிரான்,

"தலைமை யோடுநின் தாரமும்
உனக்கு இன்று தருவென்'

என்று உறுதி கூறுகிறான். என்றாலும் வாலியின்பால் குத்தும் உதையும் உண்ட சுக்ரீவன், இராமபிரானால் வாலியைக் கொல்லக் கூடுமோ என்று ஐயுறுகின்றான். அவன் ஐயத்தைக் குறிப்பாக உணர்ந்து கொண்ட அனுமன், இராமபிரான் கையின் அமைந்து விளங்கும் சங்கு சக்கர அடையாளங்களை உரைத்து அவனைத் தெளிவிக்கின்றான். 'அவன் திருமால்தான் என்பதற்கு இன்னும் ஏது உண்டு. அதற்கு என் அன்பே சான்று. ஐய! என் என்பு நெக்கு உருகுகின்றதே உனக்குத்தெரியவில்லையா?' என்று வலியுறுத்தினன். இவையெல்லாம் சுக்ரீவனைத் தெளிவிக்கப் போதியவாய் அமையவில்லை. கண்முன் இராமபிரானது ஆற்றலைக் காண விழைந்தான் சுக்ரீவன். அதனை அனுமன்பால் உரைக்க அவன் தயங்கினான். அதனைக்கண்டுகொண்டு, பின்னர் மராமரம் ஏழினையும் ஓரம்பால் இராமன் எய்துவதற்கான வழியைச் சுக்ரீவனுக்கு உரைத்தான். இவ்வாறு எல்லாவகையானும் அனுமன் அறிவு விளங்கிற்று. (தொடரும்)

# செய்திச் சுருக்கம்

## ஸ்ரீ தியாகராஜ சுவாமிகளின் 31-வது ஆராதனை விழா

திருப்பதி ஸ்ரீ தியாகராஜ சுவாமி ஆராதனை விழாக் கமிட்டியினரால் 30-11-77 முதல் 4-12-77 வரை நடைபெற்ற 34-வது ஆராதனை உற்சவத்தில் பிரபல கர்நாடக இசை மேதை ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர் அவர்களுக்கு 'ஸப்தகிரி சங்கீத வித்வன் மணி' என்னும் பிருது வழங்கப் பெற்றது.

விழாவைத் துவக்கி வைத்த திரு வேங்கடவன் பல்கலைக் கழகத் துணை வேந்தர் பேராசிரியர் கே சச்சிதானந்த மூர்த்தி அவர்கள் கமிட்டியின் பணிகளைப் பாராட்டியதுடன், தியாகராஜ சுவாமிகளின் கீர்த்தனைகளில் பொதிந்து கிடக்கும் தத்துவக் கருத்துக்களை விளக்கும் வகையில் விரிவுரைகள் ஏற்பாடு செய்யப்பட வேண்டும் என்றும், இளைஞர்களிடையே சம்பிரதாய சங்கீதத்தின்பால் ஈடுபாடும் பற்றும் உண்டாக்கும் பொருட்டு கல்லூரிகளில் சங்கீத சங்கங்கள் அமைக்கப்பட வேண்டும் என்றும் கூறினர்.

திருப்பதி ஸ்ரீ தியாகராஜ சுவாமி ஆராதனை உற்சவத்தின் அமைப்பாளராக அரும்பணி ஆற்றிய சங்கீத வித்வான் திரு. சித்தூர் சுப்பிரமணியம் பிள்ளை அவர்களின் திருவுருவப் படத்தை அவரது சிறந்த சீடர்களுள் தலையாய இடத்தை வகிக்கும் சங்கீத வித்வான் திரு. மதுரை சோமசுந்தரம் அவர்கள் திறந்து வைத்து, திரு. சித்தூரார் அவர்கள் மாணவர்களிடம் கொண்டிருந்த அன்பையும் இசை கற்பிப்பதில் அவருக்கிருந்த தனிச் சிறப்பையும் உணர்ச்சியுடன் எடுத்துரைத்தார். திரு. மதுரை சோம சுந்தரம் அவர்களுக்கு திரு. நடராஜன் பாராட்டுப் பத்திரம் ஒன்றை வாசித்து வழங்கினர். பேராசிரியர் சச்சிதானந்த மூர்த்தி சால்வை போர்த்திக் கௌரவித்தார். திரு. சித்தூரார் அவர்களது சங்கீதப் புலமையையும் பாரம்பரியத்தையும் அரிய குணங்களையும் பற்றிப் பிரபல சங்கீத விமரிசகர் திரு. டி. எஸ். பார்த்தசாரதி உரையாற்றினர். திரு. அ. நடராஜனின் நன்றி நவிலலுக்குப் பிறகு, திரு. மதுரை சோமசுந்தரம் அவர்களின் இன்னிசைக்கச்சேரி நடைபெற்றது. இந்த இசை விழாவில் திரு. டி. லோகநாத சர்மா, திருமதி மணி கிருஷ்ணசாமி, திரு. மதுரை என். கிருஷ்ணன், திருமதி டி. டி. சீதா ஆகியோரின் சங்கீதக்கச்சேரிகளும் குமாரி (பேபி) காயத்ரியின் அற்புதமான வீணைக் கச்சேரியும், திரு. டி. ஆர். நவநீதத்தின் குழலிசைக் கச்சேரியும் இடம் பெற்றன.

விழாவின் இறுதி நாளாகிய 1977 டிசம்பர் 4 அன்று நடைபெற்ற சதஸ்ஸில் கர்நாடக இசையின் பழம் பெரும் வித்துவான்களின் வரிசையில் தனிப் புகழுடன் திகழ்ந்து வரும் சங்கீத கலாநிதி ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யருக்கு 'ஸப்தகிரி சங்கீத வித்வன் மணி' என்ற பட்டம் வழக்கப்பட்டது. திருமதி. டி. டி. சீதாவின் பிரார்த்தனை கீதத்திற்குப் பிறகு, சென்னை லூகாஸ் டி. வி. எஸ். ஸைச் சேர்ந்த திரு. எம். கிருஷ்ணசாமி அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில் கமிட்டியின் பணிகள் பற்றியும் 'சதஸ்'ஸின் வரலாறு பற்றியும் குறிப்பிட்டார். நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிய தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர். திரு. பி. எஸ். ராஜகோபால ராஜு, I.A.S., அவர்கள் தமது முன்னுரையில் திருப்பதி கலா ரசிகர்களின் துணையுடனும் பொது மக்களின் ஆதரவுடன் மட்டுமே இவ்வாண்டு விழா அழகாக நடைபெற்றதைச் சிறப்பாகக் குறிப்பிட்டார். திருப்பதி வக்கீல் திரு. எம். கிருஷ்ணசாமி, திரு. செம்மங்குடி ஸ்ரீ நிவாசய்யரின் சங்கீதப் புலமையையும் இசையின் வளர்ச்சிக்கும் மேம்பாட்டிற்கும் அவர் ஆற்றியுள்ள அருந்தொண்டுகளையும் விளக்கும் பத்திரத்தை வாசித்தளித்தார். சென்னை அட்வகேட் ஜெனரல் திரு. வி. பி. ராமன் அவர்கள் திரு. செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர் அவர்களுக்கு 'ஸப்தகிரி சங்கீத வித்வன் மணி' என்னும் பிருது பொறித்த தங்கப் பதக்கத்தைச் சூட்டி, சால்வை போர்த்திக் கௌரவித்தார். திரு. ஸ்ரீநிவாசய்யர் திருவிதாங்கூர் மகாராஜா ஸ்ரீ ஸ்வாதித் திருநாள் அவர்களின் கீர்த்தனைகளை ஸ்வரப்படுத்தியும் அங்குள்ள இசைக் கல்லூரியின் தலைவராகப் பணி புரிந்தும் சென்னை வானொலி நிலையத்தின் கருநாடக இசைப் பிரிவின் தலைவராகத்தொண்டு ஆற்றியும் உயரிய சேவை செய்ததை திரு. வி. பி. ராமன் அவர்கள் குறிப்பிட்டார்.

தி. தி. தேவஸ்தானம் பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அன்னாராவும், திரு. அ. நடராஜனும் ஆங்கிலத்திலும், வயலின் வித்வான் பேராசிரியர் திரு. டி. என். கிருஷ்ணன் தமிழிலும், திரு. வி. எஸ். வெங்கட நாராயணா தெலுங்கிலும் திரு. ஸ்ரீநிவாசய்யருக்குப் பாராட்டுகள் வழங்கினர். திரு. செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர் தமக்களிக்கப்பட்ட கௌரவத்திற்காக நன்றி தெரிவித்துப் பேசுகையில் இசைக் கல்லூரிகளில் படித்துப் பட்டம் பெற்று வெளிவரும் வித்வான்களுக்கு நல்ல வேலை வாய்ப்புகள் கிடைக்கும் பொருட்டு, சங்கீதத்தை பள்ளிக் கூடங்களிலும் கல்லூரிகளிலும் ஒரு பாடமாக வைப்பதற்கு ஆந்திர அரசு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும், இசைக் கல்லூரிகளிலிருந்து வெளிவரும் மாணவர்கள் இசையின் நுட்பங்களையும் நயங்களையும் தெரிந்து கொள்வதற்கு அநுபவமிக்க வித்வான்களிடம் தங்கியிருந்து பயில்வதற்காக உதவித் தொகையளிக்க மத்திய, மாநில அரசுகள் முன் வர வேண்டும் என்றும் கூறினர். திரு. சி. சுதர்சனம் நன்றி கூறினர்.

பிறகு திரு. செம்மங்குடி ஸ்ரீநிவாசய்யர் அரியதொரு சங்கீதக் கச்சேரி செய்து இசைப் பிரியர்களை மகிழ்வித்தார்.

## திருமலையில் புதிய சத்திரம்

19-12-77 அன்று திருமலையில் ஒரு புதிய கர்நாடக சத்திரத்திற்கான அடிக்கல் நாட்டு விழா நடைபெற்றது. விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றிய கர்நாடக அரசின் அறநிலைய அமைச்சர் திரு. வி. மாசியப்பா அவர்கள் தம்முரையில், சத்திரத்தில் பணிபுரியும் ஊழியர்கள், யாத்திரிகர்களிடம் சமூகமாக பழக வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிட்டார். அதற்கு முன்பு, இப்புதிய சத்திரத்திற்கான அடிக்கல் நாட்டி, உரையாற்றிய கர்நாடக அரசு முதல்வர். திரு. தேவராஜ் அர்ஸ் அவர்கள், தினந்தோறும் திருமலைக்கு வரும் யாத்திரிகர்களில் 40 சத விகிதம் கர்நாடக மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் என்று குறிப்

பிட்டு. இப்புதிய சத்திரத்தின் அவசியத்தை எடுத்துக் கூறினார். மேலும் அவர்தம் உரையில், இப்புதிய சத்திரத்திற்காகும் செலவில் பாதியை வசூலிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டுள்ள, கர்நாடக அறநிலைய ஆலோசனைக் குழுவின் தலைவரான திரு. வி. ஆர். நாயுடு அவர்களின் முயற்சியை முதல்வர் பாராட்டினார். இவ்விழாவில் பங்கேற்று உரையாற்றிய, தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர். டாக்டர். சி. அண்ணாராவ் அவர்கள், மைசூர் மன்னர்கள் காலத்திலிருந்தே திருமலைக்கும், கர்நாடகத்திற்கும் விளங்கி வரும் உறவினை விளக்கிப் பேசினார். ரூ. 33 இலட்சம் செலவில் இப்புதிய சத்திரம் கட்டப்படும். இதில் பாதியை கர்நாடக அரசு ஏற்கும்.

## 2-வது கூடைப் பந்தாட்டப் போட்டி

திருப்பதியில் 15-12-77 முதல் 18-12-77 வரை தி. தி. தேவஸ்தானத்தின் ஆதரவில் இரண்டாவது கூடைப் பந்தாட்டப் போட்டி ஒன்று ஸ்ரீ வேங்கடேஸ்வரா கலைக்கல்லூரி திடலில் காலையிலும் மாலையிலும் நடைபெற்றது. 15-12-77 அன்று காலை, இப்போட்டி ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு தி. தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர். திரு. பி. எஸ். ராஜ கோபால ராஜு அவர்கள் தலைமை வகித்தார். விழாவின் சிறப்பு விருந்தினரான ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகக் கல்லூரி முதல்வர். திரு. இ. ஆர். ஸ்ரீகிருஷ்ண சர்மா அவர்கள் போட்டியினைத் தொடக்கி வைத்தார்.

தென்னாட்டைச் சார்ந்த 15 அணிகள் இப்போட்டியில் பங்கேற்றன. இதில் தி. தி. தேவஸ்தான அணியும் ஒன்று. 18-12-77 அன்று நடைபெற்ற ஆட்ட இறுதிப் போட்டியில் ஹைதராபாத் பேஸ்கட் பால் அசோசியேஷன் 'ஏ' என்ற அணி, சென்னை டோர்னடோஸ் அணியை தோற்கடித்தது.

அன்று இரவு சுமார் 9 மணி அளவில் ஏற்பாடு செய்யப்பட்ட பரிசளிப்பு விழாவிற்குத் தி. தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் டாக்டர். சி. அண்ணாராவ் அவர்கள் தலைமை வகிக்க, ஸ்ரீ வேங்கடேஸ்வரா பல்கலைக் கழகக் கல்லூரியின் வரலாற்றுத் துறைத்தலைவர் பேராசிரியர். வி. எம். ரெட்டி அவர்கள் வெற்றி பெற்ற அணித்தலைவர்க்குத் தேவஸ்தான சுழற் கோப்பையை வழங்கினார். மேலும் வெற்றிப் பெற்ற அணி வீரர்களுக்கும், இறுதியாட்டப் போட்டி வரை தகுதி பெற்ற அணி வீரர்களுக்கும் வெள்ளிப் பதக்கங்கள் வழங்கினார். திரு. பி. கே. ஆர். ஜெயராமகிருஷ்ணன் அவர்கள் நன்றி நவின்றார்

## திருவேங்கடவன் பல்கலைக் கழகக் கல்லூரித் தமிழ் மன்றத் துவக்க விழா:

திருவேங்கடவன் பல்கலைக் கழகக் கல்லூரியில் 28-11-77 திங்களன்று மாலை 4-30 மணியளவில் தமிழ் மன்றத் துவக்க விழா நடைபெற்றது.

கூட்டத்திற்கு தலைமை தாங்கிய தமிழ்த் துறைத் தலைவர். டாக்டர். கு. தாமோதரனார் அவர்கள் தனது தலைமை முன்னுரையில் அடுத்தக் கல்வியாண்டு முதல் தமிழில் வைணவ சித்தாந்தத்தை விருப்ப பாடமாக அறிமுகம் செய்ய விருப்பதை அறிவித்தார்.

துவக்க விழாச் சொற்பொழிவு ஆற்றுகையில் கேந்திரிய சமஸ்கிருத வித்யா பீடத்தில் துணைப் பேராசிரியராகப் பணியாற்றும் சாஸ்திர ரத்நாகர, தர்க்க வாசஸ்பதி டாக்டர். என். எஸ். இராமாநுச தாதாசார்யா அவர்கள், ஸ்ரீ வைணவம் என்றால் என்ன? ஸ்ரீ வைணவன் யார்? என்பன போன்றவற்றை வெகுச் சுவையாகவும் பயனுள்ள வகையிலும் எடுத்து விளக்கினார்.

அடுத்துப் பேசிய பல்கலைக் கழகக் கல்வித் துறை முதன்மையர் பேராசிரியர். ஆர். சீனிவாச ராவ் அவர்கள் ஆராய்ச்சி மாணவர்களுக்குச் சிறந்த பல கருத்துகளை எடுத்துக் கூறியதுடன், ஆராய்ச்சி செய்யும் மாணவர்களுக்கு அறிவுரையும், வாழ்த்தும் வழங்கினார்.

அதன் பின்னர் மாணவர்கள் சார்பில் தமிழ்த் துறை செயலர். செல்வி. ஒய். வசந்தாவும், ஆசிரியர்கள் சார்பில் டாக்டர். பொன். சௌரிராசன் அவர்களும் நன்றி நவின்றனர். பின் தமிழ்த்தாய் வணக்கத்துடனும், தேசிய கீதத்துடனும் விழா இனிது முடியுற்றது.

## உந்து பந்தாட்டப் போட்டி

தி. தி. தேவஸ்தான விளையாட்டுக் குழுவின் சார்பில் திருப்பதியில் 23-1-78 முதல் 26-1-78 வரை நான்கு நாட்கள் திறந்த வெளி உந்துபந்தாட்டப் போட்டி (Open Volley-Ball Tournament) ஒன்று நடைபெற உள்ளது. போட்டியில் பங்கேற்க விரும்பும் அணியினர் தங்கள் விண்ணப்பங்களை 10-1-78-க்குள் 'The Welfare officer T.T.D Tirupati' என்ற முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். மற்றைய விவரங்களுக்கும் மேற் குறிப்பிட்ட விலாசத்துடன் தொடர்பு கொள்ள வேண்டும்.

## சந்தாதாரர்களுக்கு...

28-2-78 ஆம் தேதியுடன் சந்தாக் காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஆகவே அவ்வெண்கள் உடைய சந்தாதாரர்கள் தங்கள் சந்தா எண்களைக் குறித்துக் கொண்டு தாங்கள் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தி தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளவும்.

11, 20, 33, 38, 88, 141, 189, 231, 251, 286, 287, 311, 378, 458, 591, 635, 678, 715, 737, 758, 789, 880, 995, 1014, 1018, 1040, 1053, 1059, 1078, 1089, 1096, 1135, 1383, 1633, 1696, 1697, 1698, 1699, 1700, 1701, 1702, 1703, 1704, 1705, 1706, 1707, 1708, 1709, 1710, 1711, 1712, 1713, 1714, 1715, 1716, 1717, 1718, 1719, 1720, 1721, 1722, 1723, 1724, 1725, 1726, 1727, 1728, 1729, 1730, 1731, 1732, 1733, 1734, 1736, 1737, 1738, 1739, 1740, 1741, 1742, 1743, 1744, 1745, 1746, 1747, 1748, 1749, 1765, 1839, 1992.

# ராசி பலன் (1-1-78 முதல் 31-1-78 வரை)

டாக்டர் டி. அர்க்கசோமயாஜி, M.A., Ph.D.
திருப்பதி.



### மேஷம் :

[அசுவனி பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய]

எதிரிகளால் தான் இகழ்ச்சிக்குள்ளாதல், சிறிது அலுவலகக் கவலை, உடல் நலக்குறைவு எதிர்பார்ப்புகளில் தாமதம், மனைவிக்கு மனயமைதியின்மை, இறுதியில் வெற்றியும் லாபமும், புதியன வாங்குதல்.



### ரிஷபம் :

[கார்த்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய]

லாபமும் வெற்றியும், ஆனால் எதிரிகள் ஏற்படல், தன் பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் நன்மை, பிரயாணம், உற்றார் உறவினருடன் பிரிவு.



### மிதுனம் :

[மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய].

உடல் நலமேன்மை, லாபம் மற்றும் வெற்றி ஆனால் சிறிது அலுவலகக் கவலை, பெண்களால் கெடுதி ஏற்படல்.



### கடகம் :

[புனர் பூசம் 4-ம் பாதம் முதல் பூசம் ஆயில்யம் முடிய]

அலுவலகம் சம்பந்தப்பட்ட வேலைகளில் வெற்றி, ஆனால் அதிக செலவு, குடும்பத்தில் கருத்து வேற்றுமைகள், பிரயாணமும் அதனால் சோர்வும், தீயோர்களால் தன் நற்பெயர் கெடுவதற்கான வாய்ப்பு.



### சிம்மம் :

[மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய].

எதிர்பார்ப்புகள் தாமதிக்கப்படல், உறவினர் வருகை, மனைவிக்கு மனயமைதியின்மை, அதிக செலவு, புதிய நட்புறவுகள்.



### கன்னி :

[உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய].

லாபம், வெற்றி, புதியன வாங்குதல் குடும்பத்தில் மகிழ்ச்சி ஆனால் அலுவலகக்கவலை.



### துலா :

[சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம்முடிய]

லாபம், மகிழ்ச்சி, புதிய நண்பர்கள் புதிய வீட்டுச் சாமான்கள் அல்லது தானிய வகைகள் வாங்குதல், ஏமாற்றப்படுதல்.



### விருச்சிகம் :

[விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம் கேட்டை முடிய]

பிரயாணமும் அதனால் உடல்நலமின்மையும், அதிக செலவினம், எதிரிகளால் கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதலும் அவமானப்படுதலும்.



### தனுசு :

[மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய].

தீய நடவடிக்கைகளுக்குள்ளாதல், கருத்து வேறுபாடுகள், சிறிது உடல் நலமின்மை, தன் நற்பெயருக்குக்களங்கம் ஏற்படல் ஆயினும் குடும்பத்தில் மகிழ்ச்சி.



### மகரம் :

[உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய].

பொருள் வரவு, ஆனால் வயிறு சம்பந்தப்பட்ட நோய்களினால் அவதிப்படல், தன் மக்களிடமிருந்து பிரிவு, மனைவிக்கு மனயமைதி கெடல்.



### கும்பம் :

[அவிட்டம் 3-ம் பாதம முதல, சதையம், பூரட்டாதி, 3-ம் பாதம் முடிய]

நல்ல லாபம், மகிழ்ச்சி, தன் மக்களுக்கு நன்மை ஏற்படல், வெற்றி, பிரயாணம், புதியன வாங்குதல்.



### மீனம் :

[பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய].

லாபம் வெற்றி, புதிய நண்பர்கள், மகிழ்ச்சி, தன் பிள்ளைகள் பெண்கள் பொறுத்தவரை சிறிது மனக்கவலை, உறவினர்களால் கெடுதி ஏற்பட வாய்ப்பு.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T.T.D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI 517501




திருமலை திருப்பதி தேவஸ்தான

## ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

ஹாரத்தி (ஒவ்வொன்றுக்கும்) கட்டணம் ரூ. 1

### ஸேவைகள் (ஸேவிப்பது மாத்திரம்)

| | | |
|---|---|---|
| சிறப்பு தரிசனம் | ரூ. | 25 |
| தோமாலை ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |
| அர்ச்சனை (ஸஹஸ்ரநாமம் அஷ்டோத்தரம்) பிறகு தரிசனம் | ,, | 4 |
| ஏகாந்த ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| பூலங்கி ஸேவைக்குப் பிறகு தரிசனம் | ,, | 4 |
| திருமஞ்சனம் ஸேவைக்குப்பிறகு தரிசனம் | ,, | 4 |

### கைங்கர்யங்கள் (செய்து வைப்பது)

| | | |
|---|---|---|
| ஆமநதரணோத்ஸவம் | ,, | 200 |
| பூலங்கி ஸேவை | ,, | 60 |
| திருமஞ்சனம் | ,, | 450 |
| கற்பூராக் கிண்ணி | ,, | 250 |
| புனுகுசட்டம் கிண்ணி | ,, | 100 |
| கஸ்தூரிக் கிண்ணி | ,, | 100 |
| ஜாபாராக் கிண்ணி | ,, | 100 |
| ஸஹஸ்ர கலசாபிஷேகம் | ,, | 2000 |
| திருப்பாவாடை | ,, | 4000 |
| கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ,, | 1745 |

### உத்ஸவக் கட்டணங்கள்

| | | |
|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ,, | 2000 |
| பிரம்மோத்ஸவம் | ,, | 750 |
| கல்யாண உத்ஸவம் | ,, | 1000 |
| ஊஞ்சல் சேவை | ,, | 1000 |
| தெப்போற்சவம் | ,, | 1500 |

### வாஹனங்கள்

| | | |
|---|---|---|
| ஸர்வபூபாலம் வஜ்ரகவச சேவை 72+1 (ஹாரத்தி) | ,, | 73 |
| ஸர்வபூபாலம், கல்பவ்ருக்ஷம், பெரிய சேஷவாஹனம் ஸூர்யப்ரபை, புஷ்பரதம், முத்துப்பந்தல், தங்ககருடவாஹனம் தனித்தனி 62+1 (ஹாரத்தி) | ரூ. | 63 |
| வெள்ளி கருடவாஹனம், ஹனுமந்த வாஹனம், சின்ன சேஷவாஹனம், குதிரை வாஹனம், ஸிம்ஹவாஹனம், ஹம்ஸ வாஹனம், சந்திரபிரபை, யானை வாஹனம் தனித்தனி 32+1 (ஹாரத்தி) | ,, | 33 |

### பிரஸாதங்கள் (கால் சோலா தளிகை ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | ,, | 40 |
| புளிஹோரை | ,, | 50 |
| பொங்கல் | ,, | 55 |
| சர்க்கரைப் பொங்கல் | ,, | 65 |
| ஸாகர்பாத் | ,, | 80 |
| கேஸரிபாத் | ,, | 90 |
| பாயஸம் | ,, | 85 |
| சீரா | ,, | 155 |

### படிகள் (படி ஒன்றுக்கு)

| | | |
|---|---|---|
| லட்டு | ,, | 450 |
| வடை | ,, | 250 |
| போளி | ,, | 225 |
| தோசை | ,, | 100 |
| ஸுகியம் | ,, | 200 |
| ஜிலேபி | ,, | 450 |
| அப்பம் | ,, | 230 |
| தேன்குழல் | ,, | 200 |

### நித்திய ஸேவைகள்

| | | |
|---|---|---|
| நித்திய கற்பூர ஹாரத்தி | ,, | 21 |
| நித்திய நவநீத ஹாரத்தி | ,, | 42 |
| நித்திய அர்ச்சனை | ,, | 42 |

குறிப்பு: ஸஹஸ்ர கலசாபிஷேகம் ஒவ்வொரு புதன்கிழமையும், திருப்பாவாடை ஒவ்வொரு வியாழக்கிழமையும் நடைபெறும்.
மற்றைய விவரங்களுக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரியுடன் தொடர்புகொள்ளுக.

செயலாட்சித் தலைவர்,
திருமலை திருப்பதி தேவஸ்தானம்,
திருப்பதி 517501.

Regd. No. H/TRP/12



# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை.

## தினசரிபூசைகள், தர்மதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

சனி, ஞாயிறு, திங்கள், செவ்வாய் கிழமைகளில்

காலை

4-00 முதல் 4-30 வரை சுப்ரபாதம்
4-30 ,, 5-30 ,, விஸ்வரூப சர்வதரிசனம்
5-30 ,, 6-00 ,, சுத்தி முதலியவைகள்
6-00 ,, 7-00 ,, தோமாலசேவை(ஆர்ஜிதம்)
7-00 ,, 7-30 ,, தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்
7-30 ,, 8-30 ,, முதல் அர்ச்சனை (ஆர்ஜிதம்)
8-30 ,, 9-00 ,, முதல் மணி, பலி, சாத்துமுறை
9-00 ,, 1-00 மதியம் ஸர்வ தரிசனம்
1-00 ,, 2-00 ,, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி

மாலை

2-00 ,, 8-00 ,, ஸர்வ தரிசனம்
8-00 ,, 9-30 ,, சுத்தி இரவு கைங்கர்யம், இரவு மணி
9-00 ,, 10-00 ,, சுத்தி முதலிவைகள்
10-00 ஏகாந்த சேவை(ஆர்ஜிதம்)

புதன் கிழமைகளில் (சஹஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

4-00 ,, 4-30 ,, சுப்ரபாதம்
4-30 ,, 5-30 ,, விஸ்வரூப ஸர்வ தரிசனம்
5-30 ,, 6-00 ,, சுத்தி முதலியவை
6-00 ,, 7-00 ,, தோமாலசேவை(ஆர்ஜிதம்)
7-00 ,, 7-30 ,, தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்
7-30 ,, 8-30 ,, முதல் அர்ச்சனை(ஆர்ஜிதம்)
8-30 ,, 9-00 ,, முதல் மணி, பலி, சாத்துமுறை
9-00 ,, 10-00 ,, சஹஸ்ர கலசாபிஷேகத்திற்கு ஏற்பாடுகள்
10-00 ,, 1-00 மதியம் சஹஸ்ர கலசாபிஷேகம்
1-00 ,, 2-00 ,, சுத்தி இரண்டாவது அர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி

மாலை

2-00 ,, 8-00 ,, ஸர்வ தரிசனம்
8 00 ,, 9-30 ,, சுத்தி இரவு கைங்கர்யம், இரவுமணி முதலியவைகள்
9-30 ,, 10-00 ,, சுத்தி முதலியவைகள்
10-00 ஏகாந்த சேவை(ஆர்ஜிதம்)

வியாழக்கிழமைகளில் (திருப்பாவாடா உத்ஸவம் நடைபெறுவதால்)

காலை

4-00 ,, 4-30 ,, சுப்ரபாதம்
4-30 ,, 5-30 ,, விஸ்வரூப தரிசனம்
5-30 ,, 6-00 ,, சுத்தி முதலியவை
6-00 ,, 7-00 ,, தோமாலசேவை(ஆர்ஜிதம்)
7-00 ,, 7-30 ,, தங்க வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்
7-30 ,, 8-30 ,, முதல் அர்ச்சனை,(ஆர்ஜிதம்)
8-30 ,, 9-00 ,, முதல் மணி, பலி, சாத்துமுறை
9-00 ,, 11-00 ,, சாலிம்பு, சுத்தி 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடா அலங்காரம், மணி திருப்பாவாடா கிரஹஸ்தர்களுக்கு பஹுமானம் முதலியவை,
11-00 ,, 5-00 மாலை ஸர்வ தரிசனம்
5-00 ,, 5-30 ,, சுத்தி முதலியவை
5-30 ,, 7-00 ,, பூலங்கி சமர்ப்பணம்
7-00 ,, 8-00 ,, இரவுகைங்கர்யம், இரவுமணி
8-00 ,, 9-30 ,, பூலங்கி சேவை (ஆர்ஜிதம்)
9-30 ,, 10-00 ,, சுத்தி முதலியவை
10-00 ஏகாந்த சேவை(ஆர்ஜிதம்)

வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)

காலை

3-00 ,, 3-30 ,, சுப்ரபாதம்
3-30 ,, 5-00 ,, விஸ்வரூப ஸர்வ தரிசனம்
5-00 ,, 7-00 ,, சாலிம்பும், நித்ய கட்டளையும், கைங்கர்யங்களும் (ஏகாந்தம்)
7-00 ,, 9-00 ,, அபிஷேகம்
9-00 ,, 11-00 ,, அபிஷேகானந்தார தரிசனம் (ஆர்ஜிதம்)
11-00 ,, 12-30 மதியம் சமர்ப்பணம்
12-30 ,, 2-00 மாலை தோமால சேவை அர்ச்சனை (தனி)மணி, பலி, சாத்துமுறை
2-00 ,, 8-00 ,, ஸர்வ தரிசனம்
8-00 ,, 9-30 ,, சுத்திஇரவு கைங்கர்யங்கள், இரவு மணி
9-30 ,, 10-00 ,, சுத்தி முதலியவை
10-00 ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்)

குறிப்பு : விழா நாட்களின்போதும், சிறப்பு நிகழ்ச்சிகளின் போதும் மேற்கூறிய நிகழ்ச்சிநிரல்கள் தேவையின் பொருட்டு மாற்றப்படும்.